உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

நாகார்ஜுனை மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு:
(பட உதவி: நேஷனல் மியூசியம், புது தில்லி)

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# மீரா

இரா. மோகன்



சாகித்திய அகாதெமி

Meera: Monograph in Tamil by R. Mohan
Sahitya Akademi, New Delhi, 2014. Rs.50/-



முதல் பதிப்பு: 2014

**தலைமை அலுவலகம்:**

சாகித்திய அகாதெமி 'இரவீந்திர பவன்' 35,
பெரோஸ்ஷா சாலை, புது தில்லி — 110 001.

**விற்பனை அலுவகம்:**

'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி — 110 001.

**மண்டல அலுவலகங்கள்:**

மத்திய கல்லூரி வளாகம், பல்கலைக் கழகக் கட்டிடம்,
டாக்டர் அம்பேத்கர் வீதி, பெங்களூரு — 560 001.

4, டி.எல்.கான் சாலை, கொல்கத்தா — 700 025.

172, மும்பை மராத்தி கிரந்த சங்கிரலாய சாலை, தாதர்,
மும்பை — 400 014.

**சென்னை அலுவலகம்:**

குணா பில்டிங்ஸ், 443, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை — 600 018.

ISBN-978-81-260-4463-4

Rs. 50/-

E.mail: sahityaakademichennai@gmail.com

Laser Typeset by : Murali Digital, Chennai - 17
Cover Design by : Janarthanan, Chennai
Printed by : Imperial Graphic, Chennai - 1

# சில சொல்

தமிழ் கூறும் நல்லுலகில் 'மீரா' என்ற அழகிய ஈரெழுத்துப் புனைபெயரால் மதிப்போடும் மரியாதையோடும் அழைக்கப் பெறும் மீ.ராசேந்திரன் (1938 — 2002) எஸ்.மீனாட்சி சுந்தரம்— இலக்குமி அம்மாள் இணையருக்கு இரண்டாவது மகனாக 10.10.1938 — இல் சிவகங்கையில் பிறந்தவர்; தியாகராசர் கல்லூரியில் பயின்று தமிழில் முதுகலைப் பட்டம் பெற்றவர்; கல்லூரியில் பயிலும் நாட்களிலேயே திராவிட இயக்கக் கொள்கைகளாலும் பொதுவுடைமைச் சிந்தனைகளாலும் ஈர்க்கப் பெற்றவர்; 'மீரா கவிதைகள்' (மரபுக் கவிதை), 'கனவுகள்+ கற்பனைகள் = காகிதங்கள்' (வசன கவிதை), 'ஊசிகள்' (அங்கதக் கவிதை), 'மூன்றும் ஆறும்' (கவியரங்கக் கவிதை), 'குக்கூ' (குறுங்கவிதை), 'வா இந்தப் பக்கம்' (கட்டுரை) முதலான நூல்களால் தமிழ் எழுத்துலகில் தடம் பதித்தவர்; 'அன்னம் விடு தூது', 'கவி', 'ஓம் சக்தி', 'மூட்டா இதழ்' ஆகியவற்றின் வாயிலாக இதழியல் உலகிலும் முத்திரை பதித்தவர்; 'அன்னம்' (பதிப்பகம்), 'அகரம்' (அச்சகம்) ஆகியவற்றை நிறுவி, இளம் படைப்பாளிகள் பலர் உருவாக அடித்தளம் இட்டவர்; 'வாழ்நாள் சாதனை விருது', 'கவிக்கோ விருது', தமிழக அரசின் சிறந்த நூலுக்கான பரிசு உள்ளிட்ட பல்வேறு விருதுகளையும் பரிசுகளையும் தம் படைப்புப் பணிகளுக்காகப் பெற்ற பெருமைக்கு உரியவர்; பேராசிரியர், போராளி, கவிஞர், கட்டுரை ஆசிரியர், இதழாளர், பதிப்பாளர், அச்சக நிறுவனர் என்றாற் போல் பல்வேறு பரிமாணங்கள் படைத்தவர்; வாழ்நாளின் இறுதி மூச்சுவரை நகைச்சுவை உணர்வோடு வாழ்ந்து காட்டியவர்; 'மரபில் பூத்த புதுமலர்' என்றும், 'காலத்தின் குரல்' என்றும், 'பாவேந்தர் பாரதிதாசனின் வாரிசு' என்றும் திறனாய்வாளர்களால் மதிப்பிடப் பெற்றவர்.

*1989-ஆம் ஆண்டில் கவிஞர் மீராவுடன் இணைந்து மூதறிஞர் தமிழண்ணல் அவர்களுக்கு மணிவிழா எடுத்து, மலர் வெளியிட்ட நிகழ்வு இன்னமும் என் நெஞ்சில் பசுமையாக உள்ளது.*

**சாகித்திய அகாதெமியின்** சார்பில் வெளிவரும் 'இந்திய இலக்கியச் சிற்பி'கள் வரிசையில் கவிஞர் மீரா குறித்து நூல் எழுதும் வாய்ப்புப் பெற்றது எழுத்து வாழ்வில் யான்பெற்ற தவப்பேறு ஆகும். இந்நூலின் உருவாக்கத்தில் எனக்கு உற்றுழி உதவிய மீராவின் அருமைப் புதல்வர் **மீரா.கதிர்**, புதல்வி **கண்மணி செல்மா,** பேராசிரியப் பெருமக்கள் **மு.பழனி இராகுலதாசன், ஆ.முத்தையா** ஆகியோருக்கு என் நெஞ்சார்ந்த நன்றி என்றென்றும் உரியதாகும். என் வாழ்க்கைத் துணைவி முனைவர் **நிர்மலா**வுக்கும் நூலின் கணினியாக்கப் பணியினை மேற்கொண்ட அன்பு இளவல் **பி.கி.இராம்குமாருக்கும்** இத்தருணத்தில் என் மனமுவந்த நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

*மதுரை 625 019* இரா.மோகன்

*30.07.2014*

## பொருளடக்கம்

# 1. வாழ்க்கைச் சித்திரம்

*"மருதுபாண்டியர் கோலோச்சிய சிவகங்கைச்*
*சீமையில் கவிதை ஆட்சி செய்தவர் மீரா."*
*— இரா.மணிகண்டன்**

'மீரா' என்னும் அழகிய ஈரெழுத்துப் புனைபெயரால் தமிழ் கூறு நல்லுலகில் மதிப்போடும் மரியாதையோடும் அழைக்கப் பெறும் மீ.இராசேந்திரன், மீனாட்சிசுந்தரம் — இலக்குமி அம்மாள் இணையருக்கு இரண்டாவது மகனாகச் சிவங்கையில் 10.10.1938—இல் பிறந்தார். அவரது உடன்பிறந்தோர் இருவர். ஒருவர்: அண்ணன் மீ.மனோகரன். மற்றவர்: இளவல் மீ.கௌதமன். "மாதா, பிதா, குரு, தெய்வம் என்பார்கள். இலக்குமி அம்மாளும் எஸ்.மீனாட்சிசுந்தரமும் என் மாதா பிதாக்கள். புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசன் என் குரு. மகாகவி பாரதி என் தெய்வம். என் குருவின் மூலமே என் தெய்வத்தை தரிசித்தேன். பாரதிதாசனின் தாசன் ஆன நான், மற்றும் ஒரு பாரதிதாசன் ஆனேன்" (முன்னுரை, மீரா கவிதைகள், ப.9) என மீராவே ஓர் இடத்தில் ஈன்று புறந்தந்த தம் பெற்றோர்களைக் குறித்தும், தம் படைப்பாளுமையைச் செதுக்கிய இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை உலகின் இருபெருஞ் சுடர்களான மகாகவி பாரதி மற்றும் புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசன் ஆகியோரைப் பற்றியும் உரிய வகையில் பதிவு செய்துள்ளார். இதில் இடம்பெற்றுள்ள 'மற்றும் ஒரு பாரதிதாசன் ஆனேன்' என்னும் தொடர் கூர்ந்து நோக்கத் தக்கது; மகாகவி பாரதியைத் தெய்வமாகப் போற்றிய மீரா, படைப்புலகைப் பொறுத்த வரையில் புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசன் வழியிலேயே பெரிதும் நடை பயின்றார் என்பதைப் பறைசாற்றுவது.

---

* பின்னுரை, மீராவின் 'கோடையும் வசந்தமும்', ப.20.

மீராவுக்குத் தம்மை 'அறிவறிந்த' தம்பி ஆக்கிய அண்ணன் மீ.மனோகரன் மீது பற்றும் பாசமும் மிகுதி. ஒரு வரலாற்று அறிஞராகவும், நூலாசிரியராகவும், பத்திரிகை எழுத்தாளராகவும் முத்திரை பதித்த அவருக்குப் பின்னாளில் 'மீரா கவிதைகள்' (2002) என்னும் தலைப்பில் வெளியிட்ட நூலினைக் காணிக்கை ஆக்கியுள்ளார் மீரா.

### பர்மாவில் இருந்து தாயகம் திரும்பல்

மீராவின் தந்தை மீனாட்சிசுந்தரம் பர்மாவில் (Burma) ஒரு பல்பொருள் அங்காடியை நடத்தி வந்தார். இரண்டாவது உலகப் போரின் போது பர்மாவில் ஏற்பட்ட பிரச்சினைகளால் மீராவின் குடும்பம் மோசமான பல விளைவுகளைச் சந்திக்க நேர்ந்தது; உற்றார் உறவினர்களுடன் தாயகத்திற்குத் திரும்பும் சூழ்நிலையும் உருவானது; கல்கத்தாவில் உள்ள அகதிகள் முகாமில் சிறிது காலம் தங்கிய பிறகு, இறுதியில் சிவகங்கையை வந்தடைந்தது. அக்காலகட்டத்தில் மீனாட்சிசுந்தரத்தின் மைத்துனரான சாத்தையா மீராவின் குடும்பத்திற்கு உற்றுழி உதவினார்.

"இரண்டாம் உலகப் போர் தொடங்கிய போது பர்மாவை விட்டுத் தாயகம் திரும்பிய குடும்பங்களுள் எங்கள் குடும்பமும் ஒன்று. சின்ன வயதில் என் அண்ணனோடு பர்மியப் பள்ளி ஒன்றில் நானும் சேர்ந்து படித்திருக்கிறேன். பள்ளியில் 'மௌமௌ' என்று எனக்குப் பெயர் இருந்திருக்கிறது. பர்மாவை விட்டு வெளியேறிய போது என் பாட்டிக்குப் பரம திருப்தி. 'ராஜேந்திர பிரசாத் என்று மாமா வைத்த அழகான பெயரை பாவிப்பயல் பர்மாக்காரன் மாற்றப் பார்த்தானே... நல்ல வேளை, என் பேரனைக் காப்பாற்றிவிட்டேன்' என்று பின்னாளில் என் பாட்டி சொல்லக் கேட்டிருக்கிறேன்." (வா இந்தப் பக்கம், ப.78) என 'ஜூனியர் விகடன்' இதழில் எழுதிய கட்டுரை ஒன்றில் தம் இளமைக் காலப் பர்மா வாழ்க்கை குறித்து நினைவு கூர்ந்துள்ளார் மீரா.

### தியாகராசர் கல்லூரியில் பயிலல்

மீரா தமது தொடக்கக் கல்வியை இராமநாதபுரத்தில் உள்ள முத்தாலம்மன் பள்ளியில் படித்தார்; அதன் பிறகு அவர், இராமநாதபுரத்தில் உள்ள புகழ்பெற்ற ராஜா உயர்நிலைப் பள்ளியில் ஆறு ஆண்டுக் காலம் (1949—ஆம் ஆண்டு முதல் 1955 வரை) சேர்ந்து படித்தார்.

மீரா சிவகங்கையில் உள்ள இராஜா துரைசிங்கம் நினைவுக் கல்லூரியில் 1955—ஆம் ஆண்டில் தமது இடைநிலை வகுப்பைப் பயின்றார். இளமைப் பருவத்திலேயே ஷேக்ஸ்பியரின் நாடகங் களைப் படிக்கும் ஆர்வம் கொண்டவராக அவர் விளங்கினார். அண்ணா, பாரதிதாசன், கண்ணதாசன், மு.வ., சுரதா, தாகூர், கலீல் ஜிப்ரான், ஷெல்லி ஆகியோரின் எழுத்துக்களில் அவருக்கு ஈடுபாடு ஏற்பட்டது.

மீரா இளங்கலையில் பொருளாதாரத்தைச் சிறப்புப் பாடமாக எடுத்துப் படித்தார்; 1959—ஆம் ஆண்டில் பட்டம் பெற்றார். மதுரையில் உள்ள தியாகராசர் கல்லூரியில் அவர் தமது மேற்படிப்பினைத் தொடர்ந்தார்; 1961—ஆம் ஆண்டில் தமிழில் முதுகலைப் பட்டம் பெற்றார்.

பள்ளியிலும் கல்லூரியிலும் படித்த போது தமக்குத் தமிழறிவித்த ஆசிரியப் பெருமக்களையும், உடன் பயின்ற நண்பர்களையும் மறவாமல் பின்னாளில் படைத்த நூல்களைக் காணிக்கையாக்கித் தம் ஆழ்ந்த நன்றியறிதலையும் தோழமை உணர்வையும் புலப்படுத்தியுள்ளார் மீரா.

### தமிழ் ஆர்வம் காரணமாக அரசுப் பணியைத் துறத்தல்

மீரா தமது இளங்கலைப் பட்டத்தினைப் பயன்படுத்தித் தமிழ்நாடு வேலைவாய்ப்பு ஆணையத்தின் தேர்வு எழுதி வெற்றி பெற்றார்; அதன் பயனாக அவர் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த வாசுதேவ நல்லூரில் வருவாய்த் துறையில் உதவி யாளராகச் சில காலம் பணியாற்றினார். தமிழ் இலக்கியத்தின் மீது ஏற்பட்ட ஆர்வம் காரணமாக அவர் அரசுப் பணியினைத் துறந்து 1963—ஆம் ஆண்டு சிவகங்கையில் மன்னர் துரைசிங்கம் நினைவுக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியில் சேர்ந்தார். பின்னாளில் தாம் பயின்ற சிவகங்கைக் கல்லூரியிலேயே முதல்வராகப் பொறுப்பேற்கும் வாய்ப்பும் அவருக்குக் கிடைத்தது.

### மீரா எழுதிய முதல் மரபுக் கவிதையும் வசன கவிதையும்

மீரா எழுதிய முதல் கவிதையான 'தீபக்குன்றம்' பாரதியார் பற்றியது. அது 1959—இல் 'தாமரை' இதழில் வெளிவந்தது; மரபுக் கவிதை; எண்சீர் விருத்தம். பாவேந்தர் பாரதிதாசன் தாக்கம் அதில் தெரியும். ஏறத்தாழ அதே காலகட்டத்தில் மீரா வசன கவிதையும் எழுதினார்; தாகூரின் 'காதல் பரி'சின் பாதிப்பில்

1959—இல் 'காதல் கனி' என்ற வசன கவிதையை எழுதினார். இதுவே அவரது முதல் வசன கவிதை முயற்சி.

**திருமணமும் மக்கட் பேறும்**

மீராவின் திருமணம் 1964—ஆம் ஆண்டில் நிகழ்ந்தது. சுசிலா என்னும் பெண்ணின் நல்லாள் அவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்தார். இல்லற வாழ்வின் பயனாக மீரா—சுசிலா இணையர்க்கு ஆண் மக்கள் இருவரும் (சுடர், கதிர்) பெண்மகள் ஒருத்தியும் (கண்மணி செல்மா) பிறந்தனர். "இந்த நிமிடம் வரை ஒரு குழந்தையைப் போல் என்னைக் காப்பாற்றி வரும் என் அருமைத் துணைவியார் இரா.சுசிலா" (நன்றியுரை, மீரா கவிதைகள், ப.197) என 2002 — ஆம் ஆண்டில் வெளிவந்த 'மீரா கவிதைகள்' என்னும் நூலுக்கு எழுதிய நன்றியுரையில் தம் துணைவியார் சுசிலாவைக் குறித்து மன நிறைவோடும் நெகிழ்வோடும் மீரா எழுதி இருப்பது குறிப்பிடத்தக்கது.

குழந்தை வளர்ப்பைப் பொறுத்த வரையில் லெபனான் நாட்டுப் பெருங்கவிஞர் கலீல் ஜிப்ரானின் கொள்கையில் முழு உடன்பாடு கொண்டவராக மீரா விளங்கினார்; குறுக்கீடு இல்லாமல் குழந்தைகள் அவர்களது போக்கில் தனித்தன்மை யோடு வளர்வதற்கு இடம்தந்தார். "என் கருத்துக்களில் நூற்றுக்கு நூறு அவர்களுக்கு உடன்பாடு கிடையாது. நான் அவர்கள் உரிமையில் தலையிடுவது கிடையாது" (முன்னுரை, மீரா கவிதைகள், ப.22) என்னும் அவரது கூற்று இவ்வகையில் நினைவுகூரத்தக்கது. கவிஞர் முடியரசனின் வழியில் மீராவும் தம் மூன்று பிள்ளைகளுக்கும் சாதி மட்டுமல்ல, மதமும் மொழியும் கடந்து திருமணம் செய்து வைத்தார்.

**பணிகள் பற்பல செய்து படைப்பாளிகள் பலரை உருவாக்கிய ஆளுமையாளர்**

'என் கடன் பணி செய்து கிடப்பதே!' என்னும் அப்பர் பெருமானின் வாக்கு வேறு யாருக்குப் பொருந்துகிறதோ இல்லையோ, கவிஞர் மீராவைப் பொறுத்த வரையில் அது நூற்றுக்கு நூறு பொருந்தி வருவதாகும். 'படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும் உடைப்பெருஞ் செல்வர்' (புறநானூறு,188) என்றபடி, 'பணிகள் பற்பல செய்து படைப் பாளிகள் பலரை உருவாக்கிய ஆளுமையாளர்' மீரா ஆவார்.

கல்லூரிப் பணி, தலைமைப் பணி, முதல்வர் பொறுப்புப் பணி என்பன ஒரு கல்வியாளர் என்ற முறையில் மீரா ஆற்றிய பணிகள் ஆகும்.

கல்லூரிப் போராட்டப் பணி, தொழிற்சங்கப் பணி என்னும் இரண்டும் மீராவின் போர்க் குணத்தை வெளிப்படுத்திய பணிகள் ஆகும். தமிழ்நாட்டில் ஆசிரியர் இயக்கம் வலுப்பெறு வதற்கு அடித்தளம் அமைத்துத் தந்தவர் மீரா. இதற்காக இடைக்காலப் பணிநீக்கம் முதலாக அவர் எதிர்கொண்ட சோதனைகள் பலவாகும்.

'அன்னம் விடு தூது' இதழ்ப் பணி, 'மூட்டா' இதழ்ப் பணி, 'கவி' இதழ்ப் பணி, 'ஓம் சக்தி' இதழ்ப் பணி ஆகியவை இதழியல் துறைக்கு மீரா நல்கியுள்ள பங்களிப்பைக் காட்டுவன.

'அன்னம்' பதிப்பகச் சிறப்பாசிரியர் பணி, 'அகரம்' அச்சக மேற்பார்வைப் பணி ஆகிய இரண்டும் பதிப்புத் துறையில் — நூல் வெளியீட்டுத் துறையில் — மீரா செய்து காட்டியுள்ள சாதனைகளைப் பறைசாற்றுபவை.

"அன்னத்தின் சாதனையாக எதைக் கருதுகிறீர்கள்?" என்று ஒரு நேர்காணலில் கேட்ட போது அக்கேள்விக்கு மீரா தந்த பதில் இவ்வகையில் நினைவுகூரத்தக்கது: "'அன்ன'த்தின் சாதனை இரண்டு. ஒன்று, புதுக்கவிதைக்குக் களம் அமைத்துக் கொடுத்தது. 'வானம்பாடி' பத்திரிகையாக இருந்து புதுக்கவிதைக்குப் பரவலான கவனத்தைப் பெற்றுத் தந்தது. 'அன்னம்', பதிப்பகமாக இருந்து அதே பணியைச் செய்தது. 'கவிதை என்றால் விற்காது' என்ற கருத்தை உடைத்தது. இரண்டு, கரிசல் இலக்கியத்தைப் பிரபலப்படுத்தியது. கி.ரா. மட்டுமல்லாமல் இன்னும் 5, 6 பேர்களுடைய நூல்களை 'அன்னம்' வெளியிட்டது" (மீரா— ஒரு நேர்காணல், மீரா கவிதைகள், பக்.194—195).

'அகரம்' அச்சகத்தை 1974—ஆம் ஆண்டு ஜவஹர்லால் நேரு பிறந்த நாளான நவம்பர் 14—இல் மீரா தொடங்கினார் என்பது குறிப்பிடத்தக்கது.

'இந்தியா டுடே' இதழ் குறிப்பிடுவது போல, 'ஆங்கிலத்தில் பென்குவின் பதிப்பகம் இருப்பது போல தமிழிலும் ஒரு பதிப்பகத்தை உருவாக்க விரும்பி அன்னம் பதிப்பகத்தை ஏற்படுத்தி பல நல்ல கவிஞர்களை மீரா தமிழ் கூறும் நல்லுலகிற்கு அறிமுகப்படுத்தினார்' (ஆண்டு மலர்: 2002 — 2003) கல்லூரிப்

பணி தொடங்கி பதிப்புப் பணி வரையிலான பல்வகைப் பணிகள் எல்லாம் ஒன்று சேர்ந்து, சுற்றி வளைத்துப் பிடித்து, கட்டிப் போட்டு மீராவின் தனிப்பட்ட எழுத்துப் பணியைப் பாதித்தன என்பதும், குடும்பப் பணியை மேற்கொள்ள விடாமல் செய்தன என்பதும் உண்மையே. என்றாலும், 'ஒன்றை இழந்தால் தானே இன்னொன்றைப் பெற முடியும்? இதுதானே இயற்கை நியதி?'

## திராவிட இயக்கச் சார்பும் பொதுவுடைமைத் தத்துவ ஈடுபாடும்

மீராவுக்குக் கல்லூரியில் பயிலும் பருவத்திலேயே பகுத்தறிவுக் கொள்கைகளின் தாக்கம் ஏற்பட்டது. 'பகுத்தறிவுப் பகலவன்' எனப் போற்றப்பட்ட தந்தை பெரியாரின் சமூகச் சீர்திருத்தக் கருத்துக்கள் அவரது உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. சைவ சித்தாந்தம் சிறப்புப் பாடமாகக் கற்பிக்கப்பட்டு வந்த தியாகராசர் கல்லூரி வளாகத்திற்குள் மீராவின் ஆளுமை வளர்ச்சியில் இம்மாற்றம் நிகழ்ந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

தொடர் விளைவாக, பாவேந்தர் பாரதிதாசன் மீதும் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டார் மீரா. 'மூன்றும் ஆறும்' என்ற தம்முடைய இரண்டாவது கவிதைத் தொகுதியின் காணிக்கையுரையில் 'சமூகத்தின் வறட்சி நிலை மாற்றி வாழ்வில் புத்துணர்வூட்டும் புரட்சிக் கவிஞர்' எனப் பாரதிதாசனுக்குப் புகழாரம் சூட்டியுள்ளார் மீரா. "பாவேந்தர் பேசினார். இராச கம்பீரத் தோடு பேசினார். தமிழ் உணர்ச்சி பொங்கி வழிந்தது. மொழிப் பற்றும் இனப் பற்றும் மேலோங்க முரசறைந்தது போல் இருந்தது" (முன்னுரை, மீரா கவிதைகள், ப.19) எனப் பாவேந்தரின் பேச்சைக் கேட்ட அனுபவம் குறித்து மீரா பதிவு செய்துள்ளார்.

தந்தை பெரியாரைப் போலவே அறிஞர் அண்ணாவும் தமது எழுத்தாலும் பேச்சாலும் மீராவின் 'கவிஈர்ப்பு மையம்' ஆனார்; மீராவும் அறிஞர் அண்ணாவின் 'உள்ளங்கவர் கவிஞர்' ஆனார். அறிஞர் அண்ணா தமது இறுதிக் கடிதத்தில்,

'தெய்வங்கள் திருநாட்கள் எங்கட்கு இல்லை
தெருவோரச் சாக்கடையில் வருமா தெப்பம்?'

என்ற மீராவின் வைர வரிகளை மேற்கோள் காட்டி இருந்தது, வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த ஒரு நிகழ்வு ஆகும். இவ்வரிகளை மட்டுமன்றி, அவரது 'பொங்கல் கொண்டாட வேண்டும்' என்னும் மற்றொரு கவிதையையும், 'சாவா சந்திப்போம்' எனத்

தொடங்கும் கவிதை வரிகளையும் அண்ணா அவ்வப்போது மேற்கோள் காட்டி எழுதியுள்ளார்.

அறிஞர் அண்ணா, பாவேந்தர் பாரதிதாசன் ஆகிய இருவரின் தாக்கம் காரணமாகச் சின்ன வயது முதல் எழுபதுகளின் தொடக்கம் வரை மீரா திராவிட இயக்கத்தில் ஒன்றியிருந்தார். பாவேந்தரின் அடிச்சுவட்டில் இந்தி எதிர்ப்பு, வடவர் எதிர்ப்பு, தனித்திராவிட நாடு, தமிழ் மறுமலர்ச்சி, சமத்துவ சமுதாயம், கலப்புத் திருமணம் ஆகியவற்றைப் பாடுபொருள்களாகக் கொண்டு அவர் திராவிட இயக்கப் பாடல்களைப் புனைந்தார். “மொத்தத்தில் ஒரு சீர்திருத்தவாதி யாகவும் முற்போக்குச் சிந்தனையாளனாகவும் மனிதாபிமானி யாகவும் என்னை முதலில் வளர்த்தது திராவிட இயக்கம்” (முன்னுரை, மீரா கவிதைகள், ப.22) எனத் தம் ஆளுமை வளர்ச்சியில் திராவிட இயக்கம் நல்கிய பங்களிப்பினைக் குறித்து மீராவே ஓர் இடத்தில் பதிவு செய்துள்ளார்.

தொடக்க நாளில் திராவிட இயக்கக் கொள்கைகளால் ஈர்க்கப் பெற்ற மீரா, காலப் போக்கில் பொதுவுடைமைச் சிந்தனையால் தடுத்தாட் கொள்ளப் பெற்றார்.

பி.ஏ. இறுதி ஆண்டு பயிலும்போது, ஆசிரியராக வந்த பேராசிரியர் நா.தர்மராஜனின் மூலம் இம்மாற்றம் (Transition) மீராவின் ஆளுமையில் ஏற்படுகின்றது. அவரது தொடர்பால் குறிப்பிட்ட எழுத்துக்களை மட்டும் படித்துக் கொண்டிருந்த மீரா, பரவலாகப் படிக்கத் தொடங்குகிறார்; இடதுசாரி எழுத்தாளர்களான முல்க்ராஜ் ஆனந்த், கிருஷன் சந்தர், கே.ஏ.அப்பாஸ் ஆகியோரின் படைப்புகளை விரும்பிப் படிக்க முற்படுகிறார்.

தமிழ் முதுகலை முடித்துவிட்டு சிவகங்கைக் கல்லூரியில் ஆசிரியரான பிறகு மீரா — பேராசிரியர் நா.தர்மராஜன் தொடர்பு இன்னமும் வலுப்பெறுகின்றது; *1973*—ஆம் ஆண்டு கல்லூரியில் வெடித்த புரட்சி — போராட்டம் — அவர்கள் இருவரையும் ஒரு கூட்டுப் பறவைகள் ஆக்குகின்றது. பொதுவுடைமை இயக்கத் தலைவர்களின் எளிமை, பரிவு, எதையும் வர்க்கக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் பார்வை, திட சித்தம், போர்க் குணம் ஆகிய பண்புகள் மீராவைப் பெரிதும் கவர்கின்றன. ‘தாமரை’, ‘செம்மலர்’, ‘ஜீவா மலர்’ முதலான

பொதுவுடைமை சார்ந்த இதழ்களில் மீராவின் கவிதைகள் வெளிவருகின்றன. 'அன்னம்' மூலம் கவிஞர் கந்தர்வன், பேராசிரியர் அருளன் போன்ற பொதுவுடைமை எழுத்தாளர்களின் நூல்களை மீரா வெளியிடுகின்றார்.

திராவிட இயக்கக் கொள்கைகளின் வெளிப்பாடும், பொதுவுடைமைத் தத்துவங்களின் பதிவும் மீராவின் கவிதைகளில் சமநிலையில் இடம்பெற்றிருக்கக் காணலாம். அறிஞர் அண்ணாவைப் பாடிய அவர், ஜீவாவையும் பாடினார்; பொங்கலைப் போற்றிய அவரது எழுதுகோல், மே நாளையும் கொண்டாடியது.

**'ஓம் சக்தி' இதழில் இணைஆசிரியராகச் சேர்தல்**

*1998*—ஆம் ஆண்டு தமிழ்ப் பேராசிரியர் பணியில் இருந்து ஓய்வு பெற்ற மறுநாளே மீரா அருட்செல்வர் நா.மகாலிங்கம் நடத்தி வந்த 'ஓம் சக்தி' இதழில் இணையாசிரியராகச் சேர்ந்தார். 'எனக்கில்லை கடவுள் கவலை' என்பதைக் கொள்கையாகக் கொண்ட ஒருவர் ஓர் ஆன்மிக இதழில் இணையாசிரியப் பணியை ஏற்றுக் கொள்ளலாமா? இதுவரை சிட்டுக் குருவியைப் போல் சுதந்திரமாக விருப்பம் போல் பறந்து திரிந்த ஒருவருக்கு இப்பணி பொருந்தி வருமா? அதுவும் சிவகங்கை மண்ணை விட்டு இடம்பெயர்ந்து சென்று இன்னொரு ஊரில் புதிய சூழலில் அவரால் தாக்குப் பிடிக்க முடியுமா? மீராவை உள்ளும் புறமும் அறிந்த எவருக்கும் இயல்பாக எழும் கேள்விகளே இவை. இவற்றிற்கு எல்லாம் பதில் கூறுவது போல் மீராவே ஓர் இடத்தில் தம் நிலைப்பாட்டினைப் பதிவு செய்துள்ளார்.

"*1998* மே *31*—ஆம் நாள் நான் ஓய்வு பெற்றேன். மறுநாளே அருட்செல்வர் டாக்டர் நா.மகாலிங்கம் அவர்களை ஆசிரியராகக் கொண்ட 'ஓம் சக்தி'யில் இணைஆசிரியராகச் சேர நேர்ந்தது. அந்தப் பத்திரிகையில் நான் சுதந்திரமாக இயங்க, எழுத, நல்ல எழுத்தாளர்களிடம் கதை, சமூகவியல், இலக்கியக் கட்டுரைகள் வாங்கி வெளியிட ஆசிரியர் அருட்செல்வரும் பதிப்பாசிரியர் சிதம்பரநாதனும் தடையாய் இருந்ததில்லை. எனினும் என்னால் தெய்வ பக்திக் கட்டுரைகள், திருக்கோயில் விழாக்கள் பற்றியெல்லாம் எழுத முடியவில்லை. அவற்றைக் கவிஞர் சிதம்பரநாதன் கவனித்துக் கொண்டார். தனி அறை, தொலைபேசி வசதி எல்லாம் இருந்தது... எனக்குப் பெரிய

சம்பளம் கொடுத்தார்கள். என் குடும்பச் சூழ்நிலைக்கு வருமானம் தேவைதான். ஆனால் எனக்கென்னவோ போதிய வேலை பார்க்காமல் சம்பளம் மட்டும் அதிகம் வாங்குவதாகத் தோன்றியது. ஒரு முதலாளியை ஒரு தொழிலாளி சுரண்டுவது போல் பட்டது" (முன்னுரை, மீரா கவிதைகள், ப.24). மீராவின் இக்கூற்று அவரது கருத்தியல் நிலைப்பாட்டினைத் தெளிவு படுத்துவதோடு, வாழ்வில் எதற்கும் — யாரிடமும் — எந்நிலையிலும் — சற்றும் சமரசம் செய்து கொள்ளாத அவரது கொள்கைப் பிடிப்பினையும் புலப்படுத்தி நிற்பது குறிப்பிடத்தக்கது.

### வாழ்நாள் சாதனையாளர் விருது பெறல்

கவிஞர் சிற்பி அறக்கட்டளையின் சார்பில் வாழ்நாள் சாதனையாளர் விருது மீராவுக்கு 2000—ஆம் ஆண்டில் வழங்கப் பெற்றது. 'பெரியார் விருது', 'பாவேந்தர் விருது', 'தமிழ்ச் சான்றோர் பேரவை விருது' முதலான இன்னும் பல விருதுகளும் அவருக்குக் கிடைத்துள்ளன.

### விருதளிப்பும் நூல் வெளியீடும்

*30.06.2002*—இல் நிகழ்ந்த கவிக்கோ விருதளிப்பு விழாவில் மீராவின் 'குக்கூ', 'கோடையும் வசந்தமும்', 'மீராவின் கவிதைகள்' ஆகிய மூன்று நூல்கள் வெளியிடப்பெற்றன. இவற்றுள் 'குக்கூ' நூலுக்குக் கவிக்கோ அப்துல் ரகுமான் 'குயில் மீண்டும் கூவுகிறது' என்னும் தலைப்பில் அணிந்துரையும், கவிஞர் பாலா 'தமிழ்க் காற்றில் மீரா தீட்டிய புதுவர்ணம்' என்னும் தலைப்பில் மதிப்புரையும் எழுதியுள்ளனர்; கவிக்கோவுக்கும் தமக்கும் ஆருயிர் நண்பராகவும் வகுப்புத் தோழராகவும் விளங்கிய பேராசிரியர் இ.சு.பாலசுந்தரம் அவர்களுக்கு மீரா இந்நூலைக் காணிக்கை ஆக்கியுள்ளார். 'கோடையும் வசந்தமும்' நூலுக்குக் கவிஞர் சிற்பி 'ஒளியின் தூதுவனே வாழ்க பல்லாண்டு!' என்னும் தலைப்பில் அணிந்துரையும், கவிஞர் தேனரசன் 'நீரோட்டக் கவிதைகளின் தேரோட்டம்' என்னும் தலைப்பில் மதிப்புரையும் வழங்கியுள்ளனர்; 'இராமநாதபுரம் அரசர் உயர்நிலைப் பள்ளியில், சிவகங்கை மன்னர் துரைசிங்கம் நினைவுக் கல்லூரியில், மதுரைத் தியாகராசர் கல்லூரியில் தமக்குத் தமிழறிவித்த தமிழ்ச் சான்றோர்கள் திரு.இரா.இராமானுச ஐயங்கார், திரு.தி.இராமானுச ஐயங்கார், 'செந்தமிழ்க் காவலர்', முனைவர் சி.இலக்குவனார் ஆகிய மூவர்க்கும்' இந்நூலைக் காணிக்கை

ஆக்கியுள்ளார். 'மீரா கவிதைகள்' என்னும் மரபுக் கவிதைத் தொகுதிக்கு அறிஞர் தமிழண்ணல் 'சிறுகுறிஞ்சி மலர்கள்' என்னும் தலைப்பில் அணிந்துரை நல்கியுள்ளார்; நூலின் முதற்பதிப்புக்கு முனைவர் ம.பெ.சீனிவாசன் 'நீராடப் போதுவீர்...' என்னும் தலைப்பில் எழுதிய தொகுப்புரையும், நா.இலக்குமணப் பெருமாள் 'இரு துளிகள்' என்னும் தலைப்பில் எழுதிய மதிப்புரையும் இந்நூலில் சேர்க்கப் பெற்றுள்ளன. 'இராஜா அண்ணாமலைச் செட்டியார் விருது பெற்ற வரலாற்றறிஞர் — தென் அமெரிக்காவின் சோழர்கள், கிழவன் சேதுபதி, மருதுபாண்டிய மன்னர்கள் ஆகிய நூல்களின் ஆசிரியர் — பத்திரிகை எழுத்தாளர் — தம்மை 'அறிவறிந்த' தம்பியாக்கிய காலஞ்சென்ற தம் அண்ணன் மீ.மனோகரன் அவர்களுக்கு' மீரா இந்நூலைக் காணிக்கை ஆக்கியுள்ளார். இந்நூலுக்கு 21 பக்க அளவில் மீரா எழுதி இருக்கும் நீண்ட முன்னுரை சிறப்பானது; அவரது தன்வரலாற்றுக் குறிப்புக்களை உள்ளடக்கியது.

### முந்நோய்களின் தாக்குதல்

'ஓம் சக்தி' இணை.ஆசிரியர் பொறுப்பில் இருந்து விடுபட்டு, விடைபெற்று வந்த மீராவுக்கு 1998—ஆம் ஆண்டில் உடல் நலக் குறைவு ஏற்பட்டது; 'பார்க்கின்சன்' என்னும் ஒரு வகை வாத நோய் அவரைத் தாக்கியது. நீரிழிவு, இதய நோய், வாத நோய் என்னும் முந்நோய்களின் தாக்குதல், பேராசிரியர் கோ.கேசவனின் மரணச் செய்தி, புத்தக விற்பனையில் ஏற்பட்ட தேக்க நிலை ஆகிய அனைத்தும் ஒன்றுசேர்ந்து கொண்டன; மீரா மனத்தளவில் பெரிதும் பாதிக்கப் பெற்றார்.

*"ஊரெங்கும் | திருவிழாக் கோலம்*
*மக்கள் நெருக்கம்| மல்லிகைச் சரமாய்*
*நான் மட்டும்| ஒதுங்கியிருந்தேன்*
*ஒற்றைப் பனைமரமாய்"* *(ப.29)*

என்னும் குக்கூ கவிதை ஒருவகையில் அவரது மன அழுத்தத்தின் பிரதிபலிப்பே எனலாம்.

'சாவா நாம் சந்திப்போம்' என்றும், 'சாகாத வானம் நாம்' என்றும் வீறுடன் முழங்கிய மீரா 01.09.2002—இல் காலமானார். கவிஞர் அறிவுமதி மீராவின் இறப்பை — இழப்பை— இரத்தினச் சுருக்கமான மொழியில் இப்படிக் குறிப்பிட்டார். 'மீர""ா(த்) துயர் !' (மீரா சிறப்பிதழ்: மண் 3).

**மீராவின் படைப்புலகம்**

சிவகங்கை அரச குடும்பத்தைச் சார்ந்த திரு.வே.திருவரங்க ராசனே மீராவைப் பதிப்புத் துறையில் முதன்முதலாக ஈடுபடச் செய்த பெருமகன் ஆவார். 1962—இல் மீரா 'சுவை' என்னும் கவிதைத் தொகுப்பினை வெளியிட்டார். "தான் பெற்ற முதற்குழந்தையை நொடிக்கொரு முறை முத்தமிட்டுக் கொஞ்சும் தாயாகவே நானும் மாறிவிட்டேன்" (ப.7) எனத் தம் முதல் நூல் வெளியீட்டு அனுபவத்தைப் பற்றி நெகிழ்வோடு நினைவு கூர்ந்துள்ளார் மீரா.

'இராசேந்திரன் கவிதைகள்' என்பது மீராவின் முதல் கவிதை நூல். அது அவரது இயற்பெயரில் வெளிவந்தது. சிவகங்கைத் தோழமை நிலையம் 1965—ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் இந்நூலை வெளியிட்டது. இந்நூலில் 45 மரபுக் கவிதைகள் இடம்பெற்றுள்ளன. இந்நூல் மீராவை ஒரு திராவிட இயக்கக் கவிஞராகவும் பாவேந்தர் பாரதிதாசனின் வாரிசாகவும் அடையாளம் காட்டியது.

மீராவின் இரண்டாவது கவிதைத் தொகுப்பு 'மூன்றும் ஆறும்.' அவரது ஒன்பது கவியரங்கக் கவிதைகளைத் தன்னகத்தே கொண்ட இந்நூலின் முதற்பதிப்பு 1967—ஆம் ஆண்டு வெளிவந்தது; ஆறாம் பதிப்பு 2003—ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் வெளிவந்துள்ளது.

'மண்ணியல் சிறுதேர் — ஒரு மதிப்பீடு' என்ற மீராவின் இலக்கியத் திறனாய்வு நூல் 1968—ஆம் ஆண்டு வெளியிடப் பெற்றது. இந்நூலினை மீரா தமது ஆசிரியப் பெருந்தகையான 'மாட்சி மிக்க' அ.கி.பரந்தாமனார் அவர்களுக்குக் காணிக்கை ஆக்கியுள்ளார். 'மண்ணியல் சிறுதேர்' நாடகத்தின் பெருமையைத் 'தமிழ் மாணவர்க்கு' நன்றாய் விளக்க வேண்டும் என்ற நோக்கில் இந்நூலைப் படைத்திருப்பதாக மீரா தம் 'வணக்க' உரையில் குறிப்பிட்டுள்ளார். பாவலர் மணி புலவர் ஆ.பழனி தம் அணிந்துரையில் குறிப்பிடுவது போல இந்நூல், 'கவிஞர் மீரா என்னும் படைப்பாளிக்குள் ஓர் அருமையான திறனாளி வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்பதை வெளிப்படுத்திக் காட்டுகின்றது' (ப.8).

1971—ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் வெளிவந்த 'கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்', மீராவுக்கு நிலைத்த புகழைப் பெற்றுத் தந்த வசன கவிதைத் தொகுப்பு ஆகும். இதில் 79 வசன கவிதைகள் இடம்பெற்றுள்ளன. இந்நூலின் பதினேழாம் பதிப்பு 2012—ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் வெளிவந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

மீராவின் 'ஊசிகள்' 1974—ஆம் ஆண்டு ஜூன் மாதம் வெளிவந்தது. இத்தொகுப்பு மீராவை ஒரு சிறந்த அங்கதக் கவிஞராகப் பறைசாற்றியது. இந்நூலின் எட்டாம் பதிப்பு டிசம்பர் 2008—இல் வெளிவந்துள்ளது.

'எதிர்காலத் தமிழ்க் கவிதை' என்னும் மீராவின் கட்டுரைத் தொகுப்பு 1985—ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் வெளிவந்தது. இந்நூலின் இரண்டாம் பதிப்பு நவம்பர் 1985—இல் வெளி வந்துள்ளது. 'எதிர்காலத் தமிழ்க் கவிதை', 'இருபத்தோராம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைக்கு ஒரு கட்டியம்' (பிற்சேர்க்கை, மீராவின் குக்கூ, ப.82) என்பார் கவிஞர் தமிழ்நாடன்.

'ஜூனியர் விகடன்' இதழில் மீரா எழுதிய கட்டுரைகள் 'வா இந்தப் பக்கம்' என்னும் நூல் வடிவில் செப்டம்பர் 1986—இல் வெளிவந்துள்ளன. "அப்துல் ரகுமான் 'ஜூனியர் விகட'னில் நூறு பூக்களை மலரச் செய்வதற்கு முன்பு பத்து நார்களை அளிக்கும் 'பாக்கியம்' எனக்குக் கிடைத்தது. இந்த வகையில் அவருக்கு நான் முன்னோடி" (வா இந்தப் பக்கம், ப.12) என இந்நூலுக்கு எழுதிய 'குறிப்புரை'யில் தமக்கே உரிய பாணியில் குறிப்பிட்டுள்ளார் மீரா.

பேராசிரியர் அப்துல் காதர் குறிப்பிடுவது போல, "விமான தளத்தின் ஓடுபாதை (Runway) மாதிரியான வரம்பிற்குட்பட்ட மரபில் ஓடி, வசனக் காற்றில் சிறகு விரித்து, எல்லைக்கோடற்ற புதுக்கவிதை வானத்தில் மீராவின் பயணம் தொடர்கிறது" (மீராவின் கனவுகள், ப.16). "மீராவின் படைப்புலகம் ஒரு வர்ணச் சித்திரமல்ல, வர்ண விசித்திரம். மரபுக் கவிதையின் விசால வீதிகளில் கடிவாளமில்லாத புரவியாய் பவனி வரவும் அவரால் முடிந்தது. புதுக்கவிதையின் விசுவ வெளியில் ஓசையின்றி நழுவும் விண்கலமாவதும் அவருக்குச் சாத்தியமானது" (அணிந்துரை, மீராவின் 'கோடையும் வசந்தமும்', பக்.4—5) என்னும் கவிஞர் சிற்பியின் மதிப்பீடும் இவ்வகையில் மனங்கொளத் தக்கதாகும்.

**காலத்தின் குரல்**

'ஒரு சுயசரிதைக் கவிதை' என்னும் தலைப்பில் மீரா படைத்துள்ள ஓர் அற்புதமான கவிதை வருமாறு:

*"அன்றொரு நேற்று / 'அருணாசலம் பேரன்/*
*லட்சுமி மவன்'*
*'அடுத்தொரு நேற்று/ 'சுசி புருஷன்...'*
*'நேற்றொரு நேற்று/ 'சுடர் அப்பா... / கதிர் அப்பா...*
*கண்மணி அப்பா...!*
*இன்று / 'காவியா தாத்தா' / 'ஓவியா தாத்தா'/*
*'அபூர்வா தாத்தா...'*
*எனக்கொரு பெயர் இருப்பது/ எப்படித் தெரியாமல்*
*போனது*
*என் தெருக்காரர்களுக்கு...?"*

(கோடையும் வசந்தமும், பக்.84&85)

மீராவே இக்கவிதையில் சுட்டுவது போல், அவர் நேற்று 'அருணாசலம் பேரன்'; 'லட்சுமி மகன்'; அடுத்து, திருமணம் ஆன நிலையில் 'சுசி புருஷன்'; பிள்ளைகள் பிறந்த பிறகு, 'சுடர் அப்பா'; 'கதிர் அப்பா'; 'கண்மணி அப்பா'; இன்று பேர்த்திகள் கண்ட சூழலில் அவர், 'காவியா தாத்தா'; 'ஓவியா தாத்தா'; 'அபூர்வா தாத்தா'. அவரது தெருக்காரர்களுக்கு வேண்டுமானால், அவருக்கென்று ஒரு பெயர் இருப்பது தெரியாமல் போய் இருக்கலாம். ஆனால், தமிழுக்கு நன்றாகவே தெரியும், 'மீரா — கவிதை ஆர்வலர்களின் நெஞ்சில் இன்பத் தேன் பாய்ச்சும் ஒரு திருப்பெயர் என்று!' இன்னமும் கூர்மையாகச் சொல்ல வேண்டும் என்றால், 'மீரா வெறும் கவிஞர் மட்டுமல்ல; அவர் வாழ்ந்த காலத்தின் குரலும் கூட!'

## 2. 'மரபில் பூத்த புதுமலர்'

*"நான் நான் அல்ல; நான் மட்டுமல்ல. எல்லாரும் கலந்த ஓர் அவதாரம். ஆமாம்... நான் செத்தாலும் வாழ்வேன்."*

*– மீரா**

மீராவின் முதல் கவிதை நூலான 'இராசேந்திரன் கவிதைகள்' 1965 அக்டோபரில் அவரது இயற்பெயரில் வெளிவந்தது. அப்போது அதைத் தொகுத்துத் தந்தவர் சேந்தி உடையநாதபுரம் சீனிவாசன் என்னும் மீராவின் மாணவர்; சிவகங்கைக் கல்லூரியில் பி.ஏ. இறுதி ஆண்டு படித்துக் கொண்டிருந்தவர். இந்நூலே 2002—ஆம் ஆண்டில் 'மீராவின் கவிதைகள்' என்று பெயர் மாற்றம் பெற்று வெளிவந்துள்ளது. 'அமுதத் துளிகள்', 'கண்ணீர்த் துளிகள்', 'தேன் துளிகள்', 'பன்னீர்த் துளிகள்', 'மழைத் துளிகள்', 'குருதித் துளிகள்' என்னும் ஆறு உள்தலைப்புக்களில் இந்நூலில் கவிதைகள் பாகுபடுத்தப் பெற்றுள்ளன. "என்னை 'அறிவறிந்த' தம்பியாக்கிய காலஞ்சென்ற என் அண்ணன் மீ.மனோகரன் அவர்களுக்கு" என்னும் சிறப்புக் குறிப்போடு இந்நூலைத் தம் அண்ணனுக்குக் காணிக்கை ஆக்கியுள்ளார் மீரா. "37 ஆண்டுகளாக இராசேந்திரன் கவிதைகள் அல்லது மீரா கவிதைகள் மறுபதிப்பு வராததற்கு என்ன காரணம் என்று எனக்கே புரியவில்லை. கல்லூரிப் பணி, தலைமைப் பணி, முதல்வர் பொறுப்புப் பணி, கல்லூரிப் போராட்டப் பணி, தொழிற்சங்கப் பணி, 'கவி' இதழ்ப் பணி, 'அன்னம் விடு தூது' இதழ்ப் பணி, அன்னம் பதிப்பகச் சிறப்பாசிரியர் பணி, அகரம் அச்சக மேற்பார்வைப் பணி, கொஞ்சம் குடும்பப் பணி இவை எல்லாம் சேர்ந்து என் எழுத்துப் பணியை வளைத்துப் பிடித்துக் கட்டிப்போட்டு விட்டன என்று தான் சொல்ல வேண்டும்" (ப.24) என இத் தொகுப்பிற்கு எழுதிய முன்னுரையில் மீரா குறிப்பிட்டிருப்பது இங்கே நினைவுகூரத்தக்கது.

* முன்னுரை, மீரா கவிதைகள், ப.39.

"மீராவின் மரபு வழிப் பாடல்கள் இவை. இவற்றில் சந்தம் தழுவியவை சில. எண்சீர் விருத்தத்தில் அன்றே இவர் பல வடிவமைப்புச் சோதனைகள் செய்து பார்த்துள்ளார். சங்க இலக்கிய மணம் உண்டு, பாரதியின் தாக்கமுண்டு, பாரதி தாசனின் பரம்பரை முத்திரையும் உண்டு; அம் மரபு வளர்ச்சியில் அவற்றை மிஞ்ச முயலும் தனித்திறன்களும் பலவுண்டு, மீராவின் பாடல்களில்! "(ப.i) எனச் 'சிறுகுறிஞ்சி மலர்கள்' என்னும் தலைப்பில் இத் தொகுப்பிற்கு எழுதிய அணிந்துரையில் பேராசிரியர் தமிழண்ணல் குறிப்பிட்டிருப்பது மீராவின் கவிதைகள் பற்றிய துல்லியமான மதிப்பீடு ஆகும். இனி இம் மதிப்பீட்டின் ஒளியில் மீரா கவிதைகளின் நோக்கும் போக்கும் குறித்து ஈண்டுக் காணலாம்.

**கவியரசர் பாரதியாரின் தாக்கம்**

*"வேலை இருக்கிறது நிரம்ப – என்னை*
*வேகப் படுத்திவிடு தாயே!"*

என்னும் முத்திரை வரிகளுடன் தொடங்கும் மீராவின் கவிதை, கவியரசர் பாரதியாரின் தாக்கம் அழுத்தமாகப் பதிந்து காணப்படும் ஓர் அற்புதமான கவிதை ஆகும்,

*"... ... ... என்றன்*
*உள்ளந் தனிற்கனல் மூட்டி – என்னை*
*ஊருக்கு உழைத்திடச் செய்வாய்!"*

என்றும்,

*"... .... ... இனி*
*நாளை உலகத்திற் கேனும் – என்னால்*
*நன்மை விளைந்திடச் செய்வாய்!"*

என்றும்,

*"... ... ... உனைக்*
*கும்பிட்டுக் கேட்கிறேன் தாயே – நான்*
*பாடையில் ஏறிடும் முன்னர் – ஒன்றைப்*
*படைத்த பெருமை அளிப்பாய்!"*

என்றும்,

*"... .... .... 'நவ*
*சிற்பி' இவன்என என்னை – வையம்*

செப்பிடச் செய்திடு வாயே!"

என்றும்,

"... .... ..... நான்
கலையிற் சிறந்திட வேண்டும் – கோடிக்
கவிதை படைத்திட வேண்டும்!"

என்றும்,

"... ... ... அதி
காலைக் கதிரவன் போலே–முகங்
காட்ட அருள்புரி தாயே!" (பக்.139–141)

என்றும் அக் கவிதையில் கவிஞர் தாயிடம் முன் வைக்கும் வேண்டுகோள்கள் அவரது படைப்பாளுமையைப் புலப்படுத்த வல்லன; 'பாட்டுக்கொரு புலவர் பாரதியா'ரின் வழியில் நடை பயிலும் 'நவ சிற்பி' மீரா என்பதைப் பறைசாற்றும் பான்மையன.

"தனி ஒருவனுக்கு உணவிலை எனில் ஜெகத்தினை அழித்திடுவோம்!" என்றும், "மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்!" என்றும், "கற்பு நிலை என்று சொல்ல வந்தார் இரு கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்!" என்றும், "இனியொரு விதி செய்வோம் — அதை எந்த நாளும் காப்போம்!" என்றும் தன்மைப் பன்மை நடையில்— எல்லோரும் ஒன்று சேர்ந்தே சமுதாயத்தில் மறுமலர்ச்சியையும் மாறுதல்களையும் தோற்றுவிக்க முடியும் என்ற கருத்தில் — பாடுவது பாரதியாரின் கவிதைப் பாணி. இதனை மீராவின் படைப்பாளுமையிலும் சிறப்பாகக் காணமுடிகின்றது.

"மன்னும் இமயமலை எங்கள் மலையே
மாநில மீதுஅது போல்பிறிது இலையே"
(பாரதியார் கவிதைகள், ப.139)

எனப் பெருமித உணர்வு பொங்கித் ததும்பி நிற்க முழங்குவார் கவியரசர் பாரதியார். அவரது அடிச்சுவட்டில் இமைப் பொழுதும் சோராமல் நடை பயிலும் கவிஞர் மீராவும் 'பொதியம் நாம்! இமயம் நாம்!' எனத் தன்மைப் பன்மை நடையில் தன்னம்பிக்கையின் உச்சியில் நின்று உரத்து மொழிகின்றார்:

"சாகாத வானம் நாம்; வாழ்வைப் பாடும்
சங்கீதப் பறவைநாம்; பெருமை வற்றிப்
போகாத நெடுங்கடல் நாம்; நிமிர்ந்து நிற்கும்

*பொதியம் நாம்; இமயம் நாம்; காலத் தீயில்*
*வேகாத – பொசுங்காத – தத்து வம்நாம்;*
*வெங்கதிர் நாம்; திங்கள் நாம்; அறிவை மாய்க்கும்*
*ஆகாத பழமையினை அகற்றிப் பாயும்*
*அழியாத காவிரி நாம்; கங்கை யும் நாம்!"* (ப.157)

மீராவின் கைவண்ணமும் கருத்து வனப்பும் கைகோத்து நிற்கும் கவிதை இது! இங்ஙனம் தன்மைப் பன்மை நடையில் தன்னம்பிக்கை வெளிப்படும் வகையில் மீரா பாடியுள்ள இடங்கள் பலவாகும்.

**பாவேந்தர் பாரதிதாசனின் பரம்பரை முத்திரை**

இயற்கையைப் பாடுவதிலும் இன்றைய சமூக அவலங் களைச் சாடுவதிலும் மீராவின் கவிதைகளில் பாரதிதாசனின் பரம்பரை முத்திரை அழுத்தமாகவும் ஆழமாகவும் படிந்திருக்கக் காண்கிறோம். 'வண்ண நிலவே, வரவா?' என்ற கவிதை மீராவின் இயற்கைச் சித்திரிப்புக்கு நல்லதோர் எடுத்துக்காட்டு ஆகும்.

*"கன்னிப் பெண்ணின் கவின்நெற் றியைப்போல்*
*முகிழ்த்து மேலும் முயன்று முயன்று*
*வளர்ந்தே அவள்முக வடிவம் அடைகிறாய்"*

என முருகியல் உணர்வு (Aesthetic Sense) விளங்கத் தொடங்கும் அக் கவிதை, காலந்தோறும் வாழையடி வாழை என வரும் கவிஞர் பரம்பரை வண்ண நிலவுக்குப் பாடி வழங்கி இருக்கும் பாராட்டுப் பத்திரத்தைப் பட்டியல் இடுகின்றது:

*"பணவெறி படைத்தோர் பைக்குள் வராத*
*வெள்ளிக் காசாம்! விண்மீன் மாணவர்*
*பள்ளிக் கூடப் பாடம் படிக்க*
*ஏற்றிவைத் திருக்கும் இரவுத் தீபமாம்!*
*மண்மங் கைதன் மருத முகத்தின்*
*அழகைப் பார்க்கும் கண் ணாடியாம்! குழந்தை*
*அன்னை யிடத்தில் அடம்பிடித்து அழுதே*
*வீசி யெறிந்த வெள்ளை அப்பமாம்!"*

வண்ண நிலவைப் பற்றிய கவிஞர் பெருமக்களின் விதவிதப் புனைந்துரைகளை — புகழுரைகளை — சுட்டிக்காட்டும் மீரா, இன்னும் ஒரு படி மேலே சென்று தம் தனித்திறன் துலங்க,

*"இந்தியா என்றோ இங்கிலாந்து என்றோ*
*வேற்றுமை பாராது எங்கும் வெளிச்சம்*
*இறைத்து வையகம் இணைப்பதால், நீ ஓர்*
*பொதுமை விரும்பியாம்! புதுமை விரும்பியாம்!"*

எனப் பாடுவது அவரது கருத்தியல் நிலைப்பாட்டினையும் முற்போக்கு மனப்பான்மையையும் நன்கு புலப்படுத்துகின்றது.

*"என்ன நிலவே, எதற்குச் சிரிக்கிறாய்?*
*திரைப்பட நடிகையைத் தெருவில் பார்த்ததும்*
*முந்தி யடித்து மொய்த்துக் கொள்ளும்*
*விசிறிகள் போல விண்மீன் கூட்டம்*
*உன்னைப் பார்த்ததும் ஓடோடி வந்து*
*கண்ணடிப் பதனைக் கண்டா சிரிக்கிறாய்?" (பக்.46–47)*

என இக்கவிதையின் இடையே வரும் வரிகள் மீராவின் ஆளுமையில் குடிகொண்டிருக்கும் மெல்லிய நகைச்சுவை உணர்வை அடையாளம் காட்டி நிற்கின்றன.

"கொலை வாளினை எடடா— மிகு, கொடியோர் செயல் அறவே" என்றும், "இருட்டறையில் உள்ளதடா உலகம், சாதி இருக்கின்றது என்பானும் இருக்கின்றானே!" என்றும், "ஓடப்பராயிருக்கும் ஏழையப்பர் உதையப்பர் ஆகிவிட்டால், ஓர் நொடிக்குள் ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி, ஒப்பப்பர் ஆய்விடுவார் உணரப்பா நீ!" என்றும் வீரியமும் வேகமும், அழுத்தமும் ஆவேசமும் மிக்க சொற்களைக் கையாண்டு உணர்ச்சி பொங்கப் பாடுவது பாவேந்தர் பாரதிதாசனின் கவிதைப் பாணி. இப் பாணியையும் கவிஞர் மீரா தம் கவிதை களில் திறம்படக் கையாண்டுள்ளார். அவரது 'கயமையைக் கைது செய்!' என்னும் கவிதை இவ் வகையில் குறிப்பிடத்தக்கது.

*"ஏனடா தம்பி, தயக்கம்? எழுவாய்!*
*பழங்கதை பேசிப் பயனிலை! புதிதாய்ச்*
*செயப்படு பொருளைச் சிந்தையில் நிறுத்து!..*

*எதற்கும்அஞ் சாமல் ஏறுபோல் நட! நட!*
*எங்கே அறத்தின் ஆலயம் உள்ளதோ*
*எங்கே அறிவுத் திருவிளக்கு உள்ளதோ*

*எங்கே அன்பின் வழிபாடு உள்ளதோ*
*அங்கே தலைவை! ஆயிரம் மலர்வை!*

*இறைநிலை எய்தல் இருக்கட்டும்; முதலில்*
*மனிதனாய் மாறு; மாற்றுஉன் சாதியை!...*
*... ... ... இதோ வாள்!*
*கயமையைக் கைதுசெய்; கடுந்தண் டனைகொடு!...*
*சமைத்திடு தம்பி, புதியதோர் தரணியே!"*

*(பக்.142–143)*

**தனித்திறன் மிளிரும் மீராவின் காதல் ஓவியம்**

பாவேந்தர் பாரதிதாசனின் 'தமிழ் வாழ்வு' என்னும் கவிதையில் வரும் ஓர் இளைஞன் தனது எதிர்வீட்டில் உள்ள பெண்ணை மாடியில் இருந்தே சைகை மூலம் காதலிக்கிறான்; ஒருநாள் சைகை மூலம் அவளைக் கிணற்றோரம் வரச் சொல்கிறான்; நேரில் சந்திக்கிறான். காதலித்த பெண் தெலுங்கு பேசுபவள் என்று தெரிந்ததும் அந்தத் தமிழ் இளைஞன் அவளை ஒதுக்கிவிடுகிறான்; தனது சொந்த அத்தை மகளிடமே வருகிறான். தெலுங்குப் பெண்ணோ கிணற்றில் வீழ்ந்து தனது உயிரை மாய்த்துக் கொள்கிறாள். இது பாவேந்தர் பாரதிதாசன் படைத்துக் காட்டியுள்ள ஒரு காதல் சித்திரம். கவிஞர் மீராவோ இவ்வகையில் தம் குருவிடம் இருந்து மாறுபட்டுள்ளார்; 'காதலுக்குச் சாதி மத மொழி பேதம் எதுவும் இல்லை' என்பதைப் பறைசாற்றும் வகையில் 'அங்கே ஆனந்தம்' என்னும் தலைப்பில் ஒரு கவிதை படைத்துள்ளார்.

ஓர் இளம்பெண்ணை நீண்ட நாட்களாகக் கண்டு அவளிடம் தன் மனத்தைப் பறிகொடுக்கிறான் மீரா படைத்துக் காட்டும் காதலன் ஒருவன். ஒருநாள் அவன், "நீ கிடைத்தால் நான் மகிழ்வேன்; கிடைப்பாயா?" என அப்பெண்ணிடம் வெளிப்படையாகக் கேட்கிறான். அப் பெண்ணோ முந்தி எழும் தனது பெருமூச்சை உள்ளடக்கி, துன்ப முத்திரையை வெளிக் காட்டி, "கண்கவரும் உம்மைக் கைப்பிடிக்கக் கடல் அளவு ஆசை தான் — ஆனால் மலையாள மங்கை நான்! தமிழ் மகன் நீர்! இனிதாய் நாம் மணம் புரிய வழியுண்டா?" எனக் கேட்கிறாள். காதலனோ,

*"சிலையே! நற் காதல்முன் சாதிஇன பேதச்*
*சிந்தனைக்கே இடமில்லை; வா!"*

என அன்பு பொங்க அழைக்கிறான். பின்னர் காதலர் இருவரும் துய்த்த இன்ப நிலையை ,

*"கலையோடே கலையானோம்! அமுதுண்ண லானோம்!*
*ஆனந்தம்! ஆனந்தம்! ஆனந்தம் அங்கே!"* (ப.72)

எனச் சொல்லோவியமாக்கிக் காட்டுகின்றார் கவிஞர்.

குருவிடம் இருந்தே மாறுபட்டு மீரா படைத்துக் காட்டியிருக்கும் இக் காதல் ஓவியத்தில் அவரது தனித்திறன் சுடர்விட்டு நிற்கக் காண்கிறோம்.

**'உயிரில், உள்ளத்தில் உரம் ஊட்டும் தமிழ்!'**

மீராவின் 'தமிழாமோ?' என்னும் கவிதை தமிழின் இனிமையையும் உயர்வையும் பறைசாற்றுவது. அதில்,

*"எங்கள் தமிழின் இனிமைக்கொரு*
*இணையாய் வருமாமோ?"*

என்றும்,

*"சுடரும்தமிழ் உயர்வுக்கு இணை*
*சொல்லத்தகு மாமோ?"*

என்றும் ஆழ்ந்த உணர்வோடு வினவும் கவிஞர், முடிவில் உயிரில்— உள்ளத்தில் — உரம் ஊட்டும் தமிழின் தனிப்பெரும் தகைமையினை நெஞ்சாரப் போற்றிப் பரவுகின்றார்:

*"குயிலின் மொழி, குழலின் மொழி*
*குழந்தை மொழி, கட்டில்*
*துயிலும் பொழுது இசைக்கும் இளந்*
*தோகை மொழி, கேட்டுப்*
*பயிலும் ஒரு கிளியின் மொழி,*
*பண்யாழ்மொழி எல்லாம்*
*உயிரில் எமது உளத்தில் உரம்*
*ஊட்டும் தமிழாமோ?"* (ப.43)

இனிமைக்கும் உயர்வுக்கும் ஒரு படி மேலாக, நமது உயிரிலும் உள்ளத்திலும் உரம் ஊட்டும் வல்லமை படைத்தது தமிழ் என்பது மீராவின் அழுத்தமான கருத்து.

மீரா காரைக்குடி அழகப்பா கல்லூரி மலருக்கு எழுதிய கவிதை 'ஏற்றம் காண்போம்!' என்பது. அதில்,

*"எட்டடுக்கு மாளிகையில் வாழ்ந் திருத்தல்,*
*இராப்பொழுதில் பஞ்ச ணையில் படுத்தி ருத்தல்,*
*பட்டுடுத்தல், சுவையான உணவை உண்டே*
*பசியாறி அமர்ந்திருத்தல், காதற் பெண்ணைத்*
*தொட்டணைத்தல் எல்லாமே உடலுக்கு இன்பம்;*
*தொல்தமிழ்தான் உயிர்க்கு இன்பம்!"* (ப.60)

என இன்பம் தருவதில் தமிழுக்கு உள்ள தனிப் பண்பினைப் போற்றும் கவிஞர், தமிழும் தமிழரும் ஏற்றம் பெறுவதற்கான வழிமுறையினையும் எடுத்துரைக்கின்றார்;

*"தன்ஏற்றம் தன்இன்பம் நினைத்தி டாமல்*
*தமிழ்ஏற்றம் தனைப் பெரிதாய்க் கருத வேண்டும்!*
*முன்னேற்றம் தமிழ்பெற்றால் பின்னர் அந்த*
*முன்னேற்றம் தமிழனுக்கும் சொந்தமாகும்!"*

என அறுதியிட்டு மொழிகின்றார்.

'முச்சங்கத்தை வைத்து மொழி வளர்த்த மாட்சி சரித்திரத்தில் பிறர் எவர்க்கும், உண்டா?" எனப் பழம் பெருமை பேசுவதோடு நின்றுவிடாமல்,

*"முயற்சி செய்தே கலைச்சொற்கள் உருவாக் காமல்*
*முத்தமிழை இகழ்வதிலே அர்த்தம் உண்டா?"* (ப.58)

எனத் தமிழ் வளர்ச்சிக்கான வழிவகையினையும் கவிஞர் சுட்டிக்காட்டுவது குறிப்பிடத்தக்கது. 'இடர்என்ன வந்தாலும் அசைந்திடாத, இமயம் போல் செந்தமிழை இதயம் வைத்தே இன்றைக்கும் என்றைக்கும் போற்ற வேண்டும்' (ப.65) என்பதே தமிழர்க்குக் கவிஞர் விடுக்கும் வேண்டுகோள்.

**அங்கதமும் நகைச்சுவையும் களிநடம் புரிந்து நிற்கும் கவிதை**

'முருகனும் முத்தையா பிள்ளையும்' என்னும் தலைப்பில் அமைந்த மீராவின் கவிதை அங்கதச் சுவையும் நகைச்சுவை உணர்வும் கை குலுங்கி நிற்கும் ஓர் அழகிய கவிதை ஆகும். அதில் பட்டை பட்டையாய்ப் பழனி விபூதியை நெற்றியிலும் நெஞ்சிலும் பூசி, செவியில் பூவைச் செருகிப் பூசை அறையை

விட்டு அசைந்து வரும் முத்தையா பிள்ளை 'முருகா!' என்கிறார். உடனே அவர் முன் ஓடோடி வந்து, "என்ன எசமான் கூப்பிட்டீர்களா?" என்று கேட்கிறான் ஏவலாளன். முத்தையா பிள்ளையின் முகமோ சிவக்கின்றது. "விடியா மூஞ்சிப் பயலே! விடிந்ததும் பாவம் படர்ந்த உன் முகத்தைப் பார்க்கவா காட்டித் தொலைக்கிறாய்; கழுதையே! சனியனே! அப்பன் முருகனை அல்லவா அழைத்தேன்? உன்னையா அழைத்தேன், உதவாக் கரையே" என்று வசைபாடுகிறார். ஏவலாளன் செல்கிறான்.

பின்னர் மதிய உணவுக்குப் பின் ஓய்வாகச் சாய்வு நாற்காலியில் திருமேனி சாய்க்கையில் முத்தையா பிள்ளை 'முருகா!' என்கிறார். உடனே அவர் முன் ஓடோடி வந்து "என்ன எசமான் கூப்பிட்டீர்களா?" என்று கேட்கிறான் ஏவலாளன். முத்தையா பிள்ளையின் முகமோ எரிகின்றது. "அழுகை மூஞ்சிப் பயலே! நல்ல நாளும் பொழுதுமாய் நாயே, என் முன் பட்டினி படர்ந்த உன் முகத்தை ஏனடா காட்டித் தொலைக்கிறாய்? கழுதையே! சனியனே! அப்பன் முருகனை அல்லவா அழைத்தேன்! உன்னையா அழைத்தேன், உதவாக் கரையே?" எனத் திட்டுகிறார். ஏவலாளன் செல்கிறான்.

உச்சி இரவு, ஒரு மணி இருக்கும். 'முருகா! முருகா! முருகா!' என்று முத்தையா பிள்ளை மாடியில் இருந்து பெருங்குரல் எழுப்புகிறார். கொல்லையில் அந்தக் குரல் எதிரொலிக்கவே ஏவலாளன் முருகன் எழுகிறான்; பின்னர் 'என்னையா கூப்பிட்டிருப்பார்; இருக்காது' என்றவன், உள்ளே போகாமல் உடம்பைப் படுக்கையில் சாய்க்கிறான்.

கொஞ்ச நேரத்தில் கோபத்தோடு மடமடவென்று மாடியை விட்டு முத்தையா பிள்ளை கொல்லையை நோக்கி வருகிறார். இனிதாய்த் தூங்கிய ஏவலாளன் முருகனைத் தட்டி எழுப்புகிறார்; திட்டி எழுப்புகிறார். "ஏனடா பேயனே! இளிச்சவாயனே! திருட்டுப் பயல்கள் செல்வத்தை எல்லாம் சுருட்டிக் கொண்டு போகையில் உன்னைக் கூப்பிட்டேனே! குரல் கொடுத்தேனே! ஓடி வந்தாயா ஓசையைக் கேட்டு? தின்று கொழுத்துத் தினமும் தூங்கவா தண்டச்சோறு? தடியனே!" என்கிறார் முத்தையா பிள்ளை. "ஐயையோ! நமது சொத்தையா திருடர் சூறையாடினர்? எசமான்! தாங்கள் முருகா என்றது காதில் விழுந்தது கணீரென! நான் எழுந்து ஓடிவரத் தான் எண்ணினேன்; ஆனால் என்னையா கூப்பிடப் போகின்றீர்கள்? அப்பன் முருகனை

அல்லவா நீங்கள் அழைத்திருப்பீர்கள் என்று பேசாதிருந்தேன் எசமான்!" என்று அந்த ஏழை முருகன் இயம்புகிறான்.

"சாவிக்
கொத்தை ஆவியாய்க் கொண்ட
முத்தையா பிள்ளையின் முகம் இருண் டதுவே!"
(பக்.147-149)

எனக் கவிதையை முடித்து வைக்கிறார் மீரா.

கவிக்கோ அப்துல் ரகுமான் குறிப்பிடுவது போல், "ஆனந்தமான நேரத்தில் ஆண்டவனை நினைக்கும் பக்தர்கள், ஆபத்தான நேரத்தில் அவனை அழைப்பதில்லை, மனிதனைத் தான் அழைக்கிறார்கள் என்ற 'குத்த'லும், இறைவன் உதவ நேராக வர மாட்டான், மனிதர் மூலமே உதவுவான் என்ற 'ஞான'மும் இந்தக் கவிதையில் இருக்கிறது" (தொகுப்பாசிரியர்கள்: அறிவுமதி & கதிர், காலத்தின் குரல், ப.14).

அங்கத ஆட்சியிலும் நகைச்சுவை உணர்விலும் புதுமைப் பித்தனின் 'கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும்' என்னும் சிறுகதைக்கு நிகரான சிறப்பினைத் தன்னகத்தே கொண்டு திகழ்கின்றது மீராவின் 'முருகனும் முத்தையா பிள்ளையும்' கவிதை.

## கண்ணீரை வரவழைக்கும் கையறுநிலைக் கவிதைகள்

தேசிய, உலக, தமிழக அரசியல் தலைவர்களையும் சிவகங்கை மன்னர் துரை.சண்முகராசாவையும் குறித்து மீரா பாடியுள்ள கையறுநிலைக் கவிதைகளில் சங்க இலக்கிய மணம் கமழ்ந்திடக் காண்கிறோம். பரந்துபட்ட சங்க இலக்கியப் பயிற்சியும் புலமையும் இவ்வகையில் அவருக்குப் பெரிதும் கைகொடுத்துள்ளன எனலாம்.

பாரதப் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு மறைந்த போது மீரா எழுதிய உள்ளத்தை உருக்கும் கையறுநிலைக் கவிதை 'அனுமதிக்க முடியாத அவலம்.' பயில்வோர் உள்ளத்தைப் பாகாய் உருக்கும் அக் கவிதையில் இடம் பெற்றுள்ள சில உயிரோட்டமான வரிகள் வருமாறு:

".... .... .... இந்த மயில்நாட்டை
ஆக்கத்தில் ஆழ்த்தியவன் அற்புதத்தில் ஆழ்த்தியவன்
தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டான்! தொல்லுலக மக்களைத்
துக்கத்தில் ஆழ்த்திவிட்டுத் தூயமகன் காந்திமகான்

*பக்கத்தில் ஆழ்ந்துவிடும் பந்தயத்தில் முந்திவிட்டான்!*
*தன்னடியில் வாழ்ந்தோர் தவிக்க உயர்நண்பன்*
*கென்னடியைத் தேடிக் கிளம்பிவிட்டான்!*
*... .... நாம் கொணர வொண்ணா*
*இடத்துக்குப் போய்விட்டான்; இன்று தனது*
*படத்துக்கு மாலையிட்டுப் பார்க்க வைத்துப்*
*போய்விட்டான்" (பக்.91–92)*

கவிஞரின் நோக்கில் ஆசியத்துச் சோதி நேருவின் மரணம் என்பது 'நெஞ்சம் அனுமதிக்கக்கூடாத அவலம்தான்; அல்லல்தான்; மனித குலத்துக்கு ஏமாற்றம் தான்!'

'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்' என்று ஓர் அழகுத் தொடர் சங்க இலக்கியத்தில் உண்டு. இதற்கு நல்லதோர் எடுத்துக்காட்டாய் வாழ்ந்து காட்டியவர் ஜீவா. 'பொதுவுடைமைப் பூ' என்பது மீரா, ஜீவாவுக்குச் சூட்டும் புகழாரம்.

*"தனக்காகக் கார்மேகம் பொழிவ தில்லை;*
*தனக்காகச் சோழ நதி பாய்வ தில்லை;*
*தனக்காகப் பூங்குயில்கள் இசைப்ப தில்லை;*
*தனக்காகச் செவ்வாழை செழிப்ப தில்லை;*
*தனக்காக இயற்கையிலே முகிழ்த்த ஒன்றும்*
*தழைப்பதில்லை; பிழைப்பதில்லை; மனிதன் மட்டும்*
*தனக்காக வாழ்கின்றான் என்பர்; அந்த*
*தரையுரையைப் பொய்க்க வைத்த சான்றோன்*
*நீயே!" (ப.100)*

எனத் 'தாமரை' இதழின் 'ஜீவா நினைவு மல'ருக்கு எழுதிய இரங்கல் கவிதையில் ஜீவாவைப் போற்றுகின்றார் மீரா.

பற்பல அறச்சாலைகளையும் அறிவுச்சாலைகளையும் நிறுவிய கருணை வள்ளல் — சிவகங்கை மன்னர் துரை.சண்முக ராசா தம் இளம்வயதிலேயே — பிறந்த நாளிலேயே (11.03.1925 — 11.03.1963) இயற்கை எய்தினார். அவர் மறைந்த ஓர் ஆண்டுக்குப் பின் அவரை நினைத்து, நெஞ்சம் நெகிழ்ந்து 'மன்னர் நினைவில்'... என்னும் தலைப்பில் ஓர் உருக்கமான கையறுநிலைக் கவிதையை இயற்றினார் கவிஞர்.

"இருந்தாலும் இது கொடுமை! கொடுமை! சாவே!
இரக்கமற்ற இரக்கமற்ற செய்கை உன் செய்கை!"

எனச் சாவின் செய்கையைச் சாடித் தொடங்கும் அக் கவிதை,

"உன்னை நான் பழிக்கின்றேன் என்று, சாவே
ஒருபோதும் கருதாதே! கேட்டி ருந்தால்
என்னைநான் கொடுத்திருப்பேன், அதனை விட்டே
ஏன் அந்தத் தேன்உயிரைப் பறித்தாய்?"

எனச் சாவிடம் கேள்விக்கணை ஒன்றைத் தொடுக்கின்றது.

"கல்லார்உள் ளார்இந்த நாட்டில் என்னும்
கறைநீங்க ஒளிஓங்கப் பள்ளி யோடு
கல்லூரி கட்டுவித்தார்; அவர்க்கு நாங்கள்
கல்லறையைக் கட்டுவிக்க லாமா கூறு!"

என்றும்,

"... .... ... சாவே!
நீ வருதல் முதுமையிலே என்றால் நன்று!
நெருங்கி வந்தாய் இளமையிலே; நன்றா கூறு!"

என்றும்,

"ஊனுடலை அழித்திடலாம்; உடல்இ யக்கும்
உயிர்மூச்சை நிறுத்திடலாம்; ஆனால்
... ... ... கருணை மன்னர்
தேன்புகழைக் கீர்த்தியினைச் சாவே, உன்னால்
தீண்டிவிட முடியாது! தெரிந்து கொள் நீ!"

(பக்.102–106)

என்றும் அக் கவிதையில் மீரா வடித்துள்ள கண்ணீர் வரிகள் கல் நெஞ்சையும் கரைக்க வல்லவை.

**பெண்ணாகப் பிறப்பதில் கிடைக்கும் பெரும்பேறு**

"மங்கையராய்ப் பிறப்பதற்கே நல்ல
மாதவம் செய்திடல் வேண்டும் அம்மா!"

எனப் பெண் பிறப்பின் மேன்மையை விதந்து மொழிவார் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை. அவரது வாக்கை வழி

மொழிவது போல் கவிஞர் மீராவும் ‘பெண்ணாகப் பிறந்தேனா?’ என்னும் தலைப்பில் ஓர் அழகிய கவிதையைப் புனைந்துள்ளார்.

"பிறந்ததுதான் பிறந்தேன்நான்
பெண்ணாகப் பிறந்தேனா?"

என வித்தியாசமான முறையில் தொடங்கும் அக் கவிதை, பெண்ணாகப் பிறப்பதில் — வாழ்வதில் — கிடைக்கும் பேரின்பங்களை — பெரும்பேறுகளை — நுண்ணிதின் படம்பிடித்துக் காட்டுகின்றது.

"துகிலுக்குள் மூடுபடாத்
தூயமுகம் காட்டித்தான்
முகிலுக்குள் போய்நிலவை
முகம்மூடச் சொன்னேனா?
(பிறந்தது தான் பிறந்தேன்..)
முள்ளில்லாத முல்லைப்பூ
முறுவலிக்கும் போதில் என்
வெள்ளைப்பல் வெளிச்சமிட்டு
‘வெவ்வெவ்வே’ என்றேனா?
(பிறந்தது தான் பிறந்தேன்..)
தீந்தேனைச் சிந்துகின்ற
தென்னாட்டுப் பூக்களைஎன்
கூந்தலில் சிறைவைத்துக்
குதூகலம் அடைந்தேனா? ...
(பிறந்தது தான் பிறந்தேன்)
நள்ளிரவு நாடகத்தின்
நகைச்சுவையாய் வந்துதித்த
பிள்ளைக்குப் பாலூட்டும்
பெரும்பேறு பெற்றேனா?
(பிறந்தது தான் பிறந்தேன்..) (பக்.51–52)

வெள்ளைப் பல் வெளிச்சம் இட ‘வெவ்வெவ்வே’ காட்டல்— வண்ண வண்ண மலர்களைக் கூந்தலில் சூடி மகிழ்தல்— குடும்பத்தின் நல்லணியாய் வந்து உதித்த குழந்தைக்குப் பாலூட்டல் என்றாற் போல் ஒரு பெண்ணாகப் பிறப்பதில் கிடைக்கும் பெரும்பேறுகள் — பேரின்பங்கள் — பலவாகும்.

**வெல்லும் சொற்களின் ஆட்சி**

*'சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை*
*வெல்லும்சொல் இன்மை அறிந்து' (645)*

என்பது 'சொல்வன்மை'க்கு வள்ளுவர் வகுக்கும் வரைவிலக்கணம். இதற்கு ஏற்ப வெல்லும் சொற்களைக் கையாண்டு மீரா படைத்துள்ள இடங்கள் பலவாகும்.

*"சூது பரத்தைமை சுள்ளென்றிருக்கும் கள் இவற்றை*
*தீது என்று அரசியலார் தேர்ந்துசெய – மேதினிக்குச்*
*சட்டம் வகுத்ததிரு வள்ளுவர்நூல் நூல்; பலர்நூல்*
*பட்டம்விடும் பையன் நூல்" (ப.122)*

என்பது வெண்பா வடிவில் கவிஞர் திருக்குறளுக்குச் சூட்டி இருக்கும் புகழாரம். 'சுள்ளென்றிருக்கும் கள்'; கவிஞரின் தேர்ந்த சொல்லாட்சி! கவிஞரின் கருத்தில் திருவள்ளுவரின் நூல் மட்டுமே 'நூல்' என மதிக்கத் தகுந்ததாம்; பலரது நூல்கள் சிறுபையன்கள் பட்டம் விடும் நூலுக்கு ஒப்பானவையாம்!

'புலமைச் சிங்கம்' (ப.108) என இரத்தினச் சுருக்கமான குறியீட்டு மொழியில் பைந்தமிழ்க் காவலர் அ.கி.பரந்தாமனாரைப் போற்றும் கவிஞர் மீரா, உரைவேந்தர் ஔவை சு. துரைசாமி அவர்களை 'ஆண் ஔவை' (ப.120) எனத் தமக்கே உரிய முத்திரை மொழியில் சிறப்பித்துப் பாடுவார்.

*"தொண்டைநாட் டில்பிறந்த அண்ணா, உன்றன்*
*தொண்டைநா டித்தானே நாங்கள் உள்ளோம்!" (ப.111)*

என்பது அறிஞர் அண்ணா பற்றிய கவிதையில் மீரா கையாண்டிருக்கும் அருமையான சொல் விளையாட்டு!

கவிஞர் மீராவின் கண்ணோட்டத்தில் திருமண நாள், 'உயிர்த்திருநாள்! தித்திக்கும் பலாச்சுளை நாள்! தெய்வீக மாளிகையைத் திறக்கும் பொன்னாள்!' (ப.113). தைத் திருநாள், 'பாட்டாளித் திருநாள்! மார்கழிப் பெண் பெற்றெடுத்த மகள்!' (ப.115); பொன்னான மே நாள் 'நம்பிக்கை நாள்!' (ப.118).

**எளிதாக விளங்குகின்ற உவமைகளின் ஆட்சி**

படிப்பவர்க்கு விளங்குகின்ற எளிய உவமைகளைத் தம் கவிதைகளில் ஆங்கே கையாண்டு எழுதிச் செல்வதில் மீராவுக்குத்

தனி ஈடுபாடு உண்டு. அதனைப் புலப்படுத்தும் சில உவமைகள் வருமாறு:

"... நீ கிடைத்தால் நான் பணக்காரன் வீட்டுப்
பந்தியிலே இருந்துண்ணஇடம் கிடைத்தால் மகிழும்
பசிகாரன் போல் மகிழ்வேன்" (ப.72)

".... ... ... அறிவு நூல்கள்
கல்லாத உள்ளத்தைப் போல் இருக்கும்
காரிருளில்..." (ப.76)

"சிறைச்சாலை விட்டுவரும் தியாகி போலச்
செறிமுகிலைக் கிழித்து நிலாக் கிளம்பும் நேரம்" (ப.66)

கவிதைகளில் மட்டுமின்றி, 'மீரா கவிதைகள்' தொகுப்பிற்கு உரைநடை வடிவில் எழுதிய முன்னுரையிலும் ஆங்காங்கே அழகிய உவமைகள் மூன்றாம் பிறைபோல் முகம் காட்டி நிற்கக் காண்கிறோம். இவ் வகையில் குறிப்பிடத்தக்க மூன்று உவமைகள் இதோ:

"பாரியின் பறம்பை மூவேந்தர்கள் முற்றுகையிட்டது போல், நான்கு ஆண்டுகளுக்கும் மேலாக நீரிழிவு, இதய நோய், வாதநோய் ஆகிய முந்நோய்களால் தாக்கப்பட்டு படுக்கையில் கிடக்கிறேன்"

"அங்கங்கே செல்வந்தர்கள் விரல் எண்ணிக்கையிலும் ஏழைகள் மயிர் எண்ணிகையிலும் இருப்பது புரிந்தது"

"பள்ளிக்குச் சேர்ந்து போகும் அண்ணன் தம்பி போல் சின்ன வயதிலிருந்தே தி.மு.க கொள்கைகளிலும் பொதுவுடைமைத் தத்துவத்திலும் ஈடுபாடு கொண்டிருந்தேன்" (பக்.22;31).

**மரபில் பூத்த புதுமலர்**

கவிஞர் மீரா மரபில் பூத்த புதுமலர் என்பதற்குக் கட்டியம் கூறி நிற்கும் கவிதை 'பிள்ளைத்தமிழ்'. அதில்,

"சங்க இலக்கியத்தின் சத்தெல்லாம் சேர்ந்திருக்கும்
அங்கம் படைத்திருக்கும் ஆணழகே!"

என ஆண் குழந்தையை மரபு மணம் கமழ அழகொழுகும் தமிழில் விளிக்கும் கவிஞர் தொடர்ந்து,

"... ... ... நாட்டின்
உடைமை பொதுவாக்க உண்மை வளர்க்க
மடமையைச் சாதி மதவெறியை மாய்த்தொழிக்க
வந்த அடலேறே!"

எனக் குழந்தையைச் சுட்டுவது அவரது புரட்சி மனப்பான்மை யையும் பொதுவுடைமைச் சிந்தனையையும் ஒருங்கே புலப்படுத்துகின்றது.

இதே போல, கவிதையின் இடையே 'இன்று நீ ஏனழுதாய்? என்னுயிரே ஏனழுதாய்?' எனக் கேட்டு,

"வாய்வயிற்றைக் காப்பதற்கே வாழும் மனிதரிடைத்
தாய்மொழியைக் காப்பதற்கும் தன்மானம் காப்பதற்கும்
நல்லவர்கள் தீக்குளித்து நாடாண்ட நந்திவர்மன்
பல்லவனாய் மாறியதைப் பார்த்தே அழுதாயோ?"
(பக்.55–56)

எனப் பாடி இருப்பது, கவிஞரின் ஆழ்ந்த தமிழுணர்வினை வெளிப்படுத்துகின்றது. 'பிள்ளைத்தமிழ்' என்னும் மரபு வடிவில் பாடினாலும், தனித்திறனும் புதுமைக்கூறும் மிளிரப் படைக்கும் வல்லமை கைவரப் பெற்றவர் மீரா என்பதை இதனால் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

'எதற்காம் இரண்டு வர்க்கம்?' என்னும் கவிதையில்,

"இறைவன் படைத்தான் என்றால் ஒழிக
எதற்காம் நரகம் சொர்க்கம் & சீச்சீ!
இறைவன் படைத்தான் என்றால் வெட்கம்
எதற்காம் இரண்டு வர்க்கம்?" (ப.128)

என வெடிப்புற வினவுவார் மீரா. 'இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் பரந்து, கெடுக உலகு இயற்றியான்' *(1062)* என்னும் குறளில் வெளிப்படும் வள்ளுவரின் அறச்சீற்றம், இங்கே மீராவின் கவிதையிலும் புதிய வடிவில் எதிரொலிக்கக் காண்கிறோம்.

'தலைவன் வருகிறான்' என்னும் கவிதை மீராவின் புத்துலகச் சிந்தனைகளைத் தாங்கி நிற்கும் ஒப்பற்ற கவிதை. அதில் தாயகம் போற்றவே எங்கணும் வாழ்த்திசை முழங்கிடத் 'தலைவன் வருகிறான்! தலைவன் வருகிறான்!' என்னும் உயிர்ப்பான வரியினைப் பலமுறை கையாண்டு, எதற்காகத் தலைவன் வருகிறான் என்பதைக் கவிஞர் வெளிப்படுத்தி இருக்கும் பாங்கு குறிப்பிடத்தக்கது:

"புரட்சி உலகைப் படைக்க –
புழுத்த சாதியைப் புதைக்க –
சமதர்மப் பயிர் தழைக்கச் செய்ய –
மேனி வியர்வையில், உழைப்பில்
இறைவன் உள்ளான் என்றே உரைக்க –
புதுயுகம் ஒன்றைப் பூமியில் சமைக்க–" (பக்.125–126)

அரிமாப் போல அஞ்சா நெஞ்சத் தலைவன் வருகிறான் என்கிறார் கவிஞர்.

**இளங்கவிஞர்களுக்கு மீராவின் வேண்டுகோள்**

இளைய தலைமுறையினருக்கு — குறிப்பாக, இளங் கவிஞர்களுக்கு — மீரா விடுத்துள்ள வேண்டுகோள் வருமாறு:

"'கனவுக'ளைப் படித்து என்னைப் போலவே எழுதும் புதுக்கவிஞர்களே! 'கனவுக'ளைப் படித்துக் காதற் கடிதங்கள் எழுதும் நவயுக இளைஞர்களே! இதோ உங்களுக்காக என் 'மீரா கவிதைகள்'. இதைப் படியுங்கள். இதில் உள்ள காதல் கவிதை களிலேயே நின்றுவிடாமல் சமூகம் சார்ந்த சிந்தனை களையும் தமிழ்ப் பற்றையும் நாட்டுப் பற்றையும் வளர்த்துக் கொள்ளுங்கள்.

தமிழ் ஈழம் வீறு கொண்டு வெற்றி கொண்டு நிற்கும் நேரம் இது. இந்த நேரத்தில் இந்தியத் தமிழினம் வீழ்ச்சியுற்றுக் கிடப்பது எனக்குச் சம்மதமில்லை எழுந்து நில்லுங்கள். எழுச்சி கொள்ளுங்கள். புரட்சி செய்யுங்கள்" (முன்னுரை, மீரா கவிதைகள், ப.38)

இங்ஙனம் புதுக்கவிஞர்களுக்கு — இளைய தலைமுறை யினருக்கு — வேண்டுகோள் விடுத்ததோடு நின்றுவிடவில்லை மீரா. ஆழ்ந்த தமிழ்ப் பற்றும் நாட்டுப் பற்றும் ததும்பி நிற்கும்— சமூகம் சார்ந்த, முற்போக்கான சிந்தனைகள் சிறந்து விளங்கும்— மனம் கலந்து பயில்வோரை எழுந்து நிற்கவும், எழுச்சி கொள்ளவும், புரட்சி செய்யவும் தூண்டும் வல்லமை படைத்த முன்னைய மரபுக் கவிதைகளைப் படைத்துத் தந்துள்ளார்; மரபைப் போற்றுவதோடு, தமது தனித்திறன் மிளிரவும் கவிதைகள் பலவற்றைப் படைத்துக் காட்டியுள்ளார்.

# 3. கவியரங்கக் கவிதைகள்

*"கவிதைகளை மக்கள் தேடிப் படிப்பதை விடவும், மக்களிடம் நேரடியாகச் சென்று தரும் பணியினை இக்கவியரங்கக் கவிதைகள் செய்கின்றன."*

*– மு. இளங்கோவன்**

கவிஞர் மீரா அவ்வப்போது பொதுமேடைகளில் பாடிய ஒன்பது கவியரங்கக் கவிதைகள் 'மூன்றும் ஆறும்' என்னும் தொகுப்பாக 1967—ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன. 'மூன்றும் ஆறும்' என்னும் தலைப்பு இத்தொகுப்பிற்குப் பொருத்தமாக இடப்பெற்றுள்ளது. 'மூன்று' என்ற எண் பற்றியும், 'ஆறு' என்ற பொருளில் பாய்ந்து ஓடுகின்ற ஆற்றைப் பற்றியும் பாடப்பெற்ற இரு கவிதைகள் இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. மூன்றும் ஆறும் என்ற இரு எண்களைக் கூட்டினால் வருவது ஒன்பது! இத்தொகுப்பில் அடங்கியுள்ள கவிதைகளும் ஒன்பது! இங்ஙனம் இரு வகையிலும் பொருந்தும் வண்ணம் நூலுக்குத் தலைப்பு அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. மேலும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனுக்கு இந்நூல் காணிக்கை ஆக்கப்பெற்றுள்ளது. இந்நூல் தமிழ்நாட்டரசின் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றப் பரிசினைப் பெற்றிருப்பது ஒரு கூடுதல் சிறப்பு ஆகும்.

### பேராசிரியர் அ.சிதம்பரநாதனின் மதிப்பீடு

'மூன்றும் ஆறும்' தொகுப்பிற்கு எழுதிய அணிந்துரையில் பேராசிரியர் அ.சிதம்பரநாதனார், 'சொல்லழகும் கருத்தழகும் நிரம்பிய கவிதை இயற்றும் தகுதியுடையவர்' என்றும், 'தமிழ் மொழியின் வளர்ச்சியிலும், தமிழ் மக்களின் முன்னேற்றத்திலும் நாட்டமுடையவர்' என்றும் மீராவுக்குப் புகழாரம் சூட்டி யுள்ளார். மேலும் அவர், 'எளிய சொற்களைக் கொண்டு ஆழ்ந்த கருத்துக்களை நயம்பட உரைக்கும் அவரது (மீராவின்) திறத்தினைப் போற்றுகின்றேன். பல இடங்களில் அவரது

* பாரதிதாசன் பரம்பரை, ப.28.

நகைச்சுவை, செய்யுளுக்கு மெருகூட்டியுள்ளது' (அணிந்துரை, மூன்றும் ஆறும், ப.5) எனவும் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தின் அடிப்படையில் மீரா படைத்துள்ள கவியரங்கக் கவிதைகளில் காணலாகும் சீரும் சிறப்பும் குறித்து இங்கே சுருங்கக் காணலாம்.

"ஒருவன்..
*மாடுபோல் பார வண்டியை இழுக்கிறான்!*
*கழுதைபோல் முதுகில் கனத்தைச் சுமக்கிறான்!*
*நாய்போல் எச்சில் நக்கித் திரிகிறான்!*
*பன்றிபோல் சாக்கடைப் பக்கம் படுக்கிறான்!*
*எனில்,மற் றொருவன் இன்னொரு பக்கம்*
*எலிபோல் சுரண்டி எங்கோ ஒளிகிறான்!*
*ஓநாய்போல் பிறர் உழைப்பைக் குடிக்கிறான்!*
*ஒட்டகம்போல் ஒதுக்கிவைத்து உண்கிறான்!*
*நரியைப் போல நன்கு நடிக்கிறான்!*
*இப்படி*
*ஒருவன் வாட, மற் றொருவன் வாட்ட*
*இருப்பதா வாழ்வு? இதுவா வாழ்வு?.."* *(பக்.68–69)*

என 'வாழ்வு' என்னும் தலைப்பில் பாடிய ஒரு கவியரங்கக் கவிதையில் எளிய உவமைகளை அடுக்கிக் கையாண்டு பொருள் பொதிந்த, சிந்திக்கத் தூண்டும் கேள்விக் கணை ஒன்றினைத் தொடுத்துள்ளார் மீரா. 'இப்படி ஒருவன் உழைக்க, மற்றொருவன் பிழைக்க இருப்பதா வாழ்வு? இதுவா வாழ்வு?' என வினவுவதோடு நின்றுவிடாமல், எது வாழ்வு, மனிதன் வாழும் நாள் என்று என்னும் வினாக்களுக்கும் கவிதையின் முடிவில் மீரா தக்கதொரு விடையினைத் தந்துள்ளார். அதனை அவரது சொற்களிலேயே இங்கே காண்பது பொருத்தமாக இருக்கும்:

"என்றைக்கு,
*ஏழ்மை வறுமை இடுகா(டு) ஏகுமோ*
*சத்தியம் பூக்குமோ சமத்துவம் சிரிக்குமோ*
*இலட்சிய வெறிகொண்டு இளைஞர் பட்டாளம்*
*புதிய உலகுக்குப் பூசை போடுமோ*
*பழைய பொய்ம்மைகள் பயந்து ஓடிடுமோ*

தன்னலம் மறந்து தாயகம் காத்த
மறவர் படைக்கு மரியாதை கிடைக்குமோ
தியாக உணர்வுத் தீக்குளித் திட்ட
வீரருக்கு எங்கும் விழாக்கள் நடக்குமோ
அன்றே,
மனிதன் பிறக்கும் நாள்! மனிதன் வாழும் நாள்!"
(பக்.69-70)

'அன்றே மனிதனைப் பாடுவேன்; மனிதனைப் பாடுவேன்; மனமகிழ்வோடே மனிதனைப் பாடுவேன்!' என அறுதியிட்டு உரைக்கின்றார் மீரா!

தமிழ்க்கடல் ராய.சொ.வின் தலைமையில் 'பொருள் செயல் வகை' என்னும் தலைப்பில் பாடிய பிறிதொரு கவியரங்கக் கவிதையில் மீரா வள்ளுவரின் பொருளியல் சிந்தனை யாது என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார். 'வாழ்க்கைக்குப் பொருள் வேண்டும்' என்பது எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியமே 'வாழ்வதிலும் பொருள் வேண்டும்' என்பதும்.

"இருளில் நடப்பதற்கும் | இயன்றிடலாம்; நிச்சயமாய்ப்
பொருளின்றி வாழ்வதோ | பூதலத்தில் இயலாதே!"

எனப் பொருளின் இன்றியமையாமையைப் புலப்படுத்தும் கவிஞர், பொருள் செயல் வகை பற்றிய வள்ளுவரின் உள்ளக் கருத்தினையும் நன்கு தெளிவுபடுத்தியுள்ளார்:

"இன்னும் பலவாறு| பொய்யாமொழிப் புலவர்
பொருளைப் புகழ்கின்றார்;
'செய்க பொருளை' எனச்|செப்புகின்றார்! இன்று சிலர்
செய்க பொருளை என்ற | திருக்குறளை எண்ணாமல்
செய்கின்றார் பொருளைத்தான் | சீர்கெட்ட
வழியினிலே!
கள்ளப் பணமடித்து | கம்பிகளை எண்ணுகின்றார்
வள்ளுவனார் பொருள் செய்ய| வகுத்த வழி
நியாய வழி!
அரிசியிலே கல்லும் | ஆவின்பா லில்நீரும்
சரிபாதி கலந்துபொருள் | திரட்டுவதோ திருட்டுவழி!

மானபங்கம் பார்க்காமல் | மதிமறந்(து) வருபவர்க்கு
ஈனஉடல் தந்துபொருள் | ஈட்டுவதோ இருட்டு வழி!
நொடிப்பொழுதில் ஒன்றைத்தான் | நூறாக்க வேண்டும் எனத்
தூரத்துச் சூது ஆடுவதோ | தூய்மையற்ற சறுக்குவழி!
ஓரிசாக் குலுக்கலிலே | ஒரு லட்சம் ரூபாயைப்
பரிசாய் எதிர்பார்த்தால் | பச்சைக் குறுக்குவழி!

இந்த வழிகளிலே
ஈட்டும் பொருளெல்லாம் | வந்ததிலும் விரைந்தேகும்"
(பக்.94–95)

சீர்கெட்ட — திருட்டு — இருட்டு — சறுக்கு — குறுக்கு வழிகளில் வரும் பொருள் எல்லாம் வந்ததை விட விரைவாக விட்டுச் சென்றுவிடும். எனவே, 'வள்ளுவரின் பொருள் மொழியைப் பயில்வீர், பொருள் சேர்க்க முயல்வீர், திருநாடாய் இந்நாடு திகழ வழிவகுப்பீர்!' எனப் பணிந்து வேண்டித் தம் கவிதையை முடிக்கின்றார் மீரா.

**மீரா போற்றும் அறிவியல் மனப்பான்மை**

"மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை இல்லை;
திறமான புலமையெனில் வெளிநாட்டோர்
அதை வணக்கம் செய்தல் வேண்டும்.
(பாரதியார் கவிதைகள், ப.169)

என்னும் கவியரசர் பாரதியாரின் வாக்கில் அசைக்க முடியாத, ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர் மீரா. அவருக்குத் தற்பெருமை பாராட்டுவதிலோ, பழங்கதைகள் பேசுவதிலோ சற்றும் உடன்பாடு இல்லை; மெய்ஞ்ஞானத்தில் வல்ல நாம், விஞ்ஞானத்திலும் தேர்ச்சி பெற்று, முன்னேறிச் சாதனை படைக்க வேண்டும் என்பது அவரது வேணவா; விழுமிய குறிக்கோள்.

26.05.1963—இல் ஆத்தூர்த் தமிழ்ச் சங்கத்தின் முத்தமிழ் விழாவில் கவிஞர் கண்ணதாசனின் தலைமையில் 'விஞ்ஞானி' என்னும் தலைப்பில் மீரா பாடிய கவியரங்கக் கவிதை இவ்

வகையில் குறிப்பிடத்தக்கது. பழந்தமிழர் விஞ்ஞானப் பட்டறிவைப் போற்றாமல் இருட்டில் இருந்து கொண்டு, பழம் பெருமை பேசியே காலத்தை வீணாகக் கழித்துக் கொண்டிருக்கும் வேடிக்கை மனிதர்கள் சிந்தித்துச் செயல்படுவதற்கு மீரா இக்கவிதையின் வாயிலாக முன்வைக்கும் கருத்து அடிப்படை யானது; அழுத்தமும் ஆழமும் வாய்ந்தது:

"மேலைத் திசைநாட்டில் | மேதக்க விஞ்ஞான
சாலைகளை அமைத்துச் | சரியான வளர்ச்சியினை
நாடுகின்றார்; வளர்கின்றார்| நாமோ உட் பூசலினால்
வாடுகிறோம்; வீணான | வளர்ச்சியினால் வதங்குகிறோம்;
விஞ்ஞானம் கண்டவரோ | விண்ஞானங்* காண்கின்றார்;
மெய்ஞ்ஞானம் பேசும்நாம்|மெய்யையும்பொய்
என்கின்றோம்" (ப.61)

மேலை நாட்டினர் எதையும் அறிவியல் மனப்பான்மை யுடன் அணுகி, இன்றை ஏற்றமிகு கருவிகளைப் பயன்படுத்திக் கொண்டு, சரியான திசையில் வளர்ச்சிப் பாதையில் பீடு நடை பயின்று கொண்டிருக்கின்றனர்; விஞ்ஞானத்தோடு விண்ஞானமும் கண்டு வருகின்றனர். மெய்ஞ்ஞானத்தில் வல்ல, பழம்பெரு நாட்டின் புதல்வர்களான நாமோ, மெய்யையும் பொய் என்று கூறி வருகிறோம்; பழங்கதைகளைப் பேசி நமக்கு நாமே பெருமை அடித்துக் கொண்டு வேடிக்கை வாழ்வு வாழ்கிறோம். இவ்வகையில்,

"கைபில் கிடைத்த | கனியைச் சிவபெருமான்
வையகத்தைச் சுற்றிமுந்தி | வரும்பிள்ளைக்கு
அளிப்பதுவாய்ச்
சொன்னார்; பின் சுற்றி வந்த | வேலவனுக்கு
அளிக்காமல்
தன்னைமெல்லச் சுற்றிவந்த | தனயனுக்குத்தான்
அளித்தார்
என்ற கிழக்கதைகள்| இயம்பும்வரை விஞ்ஞானம்
வென்று தலைதூக்கி | விளங்கமுடி யாது இங்கே!"
(ப.61)

* விண் ஞானம் - Space Science

எனக் கவிஞர் மீரா திட்டவட்டமாகவும் தெள்ளத் தெளிவாகவும் வலியுறுத்துவது மனங்கொளத்தக்கது.

கவிஞர் முடியரசன் தலைமையில் 'மூன்று' என்னும் தலைப்பில் மதுரை எழுத்தாளர் மன்றத்தின் ஏழாம் ஆண்டு விழாவில் பாடிய கவியரங்கக் கவிதையில்,

"எண்களுக்குள் மூன்றுக்கே / எழுத்துக்க ளும் மூன்றாம்
எண்களுள், வேறு எதுவும் அந்த / எழுத்தால்
அமைவதுண்டா?" (ப.76)

என மூன்று என்ற எண்ணின் தனித்தன்மையைச் சுட்டிக்காட்டும் மீரா, 'மூன்று பேராகச் சென்றால், செல்லும் காரியம் நல்லபடியாக முடியாது' என்று மூன்று குறித்துச் சமுதாயத்தில் வழங்கி வரும் மூட நம்பிக்கையைக் கடுமையாகச் சாடுகின்றார்:

"மூன்றுபே ராய்ச் சென்றால் / முடியாது வினை என்று
மூன்றை வெறுப்போர்கள் / முட்டாள்கள்; மாறாக
மூன்றாம் உலகப்போர் / மூளக்கூடாது என்போர்
சான்றோர் துயரச் / சரித்திரத்தைக் கற்றுணர்ந்தோர்"
(பக்.81–82)

மீராவின் கருத்தில் 'மூன்று பேராகச் சென்றால் முடியாது வினை' என்று மூன்றை வெறுப்பவர்கள் முட்டாள்கள்; மாறாக, மூன்றாம் உலகப் போர் மூளக்கூடாது என எண்ணுவோரே சான்றோர். அவர்களே துயர வரலாற்றைக் கற்றுணர்ந்தவரும் ஆவர்.

### இயல்பான நகைச்சுவை உணர்வின் வெளிப்பாடு

நகைச்சுவை உணர்வோடு சொல்லப் பெறும் ஒரு கருத்து அவையோரை எளிதாகச் சென்று சேரும்; அவையினரின் ஒட்டு மொத்த வரவேற்பினைப் பெறும்; பலத்த கர ஒலியும் கிடைக்கும். நகைச்சுவை உணர்வைத் தம் கவியரங்கக் கவிதை களில் ஆங்காங்கே அளவாகவும் அழகாகவும் கலந்து கருத்துக் களைப் புலப்படுத்தும் கலையில் மீரா வல்லவராக விளங்குகின்றார். சான்றாக, கவிஞர் முடியரசனின் தலைமையில் 'கருப்பு' என்னும் தலைப்பில் மீரா பாடிய கவியரங்கக் கவிதையில் இருந்து ஒரு சுவையான பகுதியை இங்கே சுட்டிக் காட்டலாம்:

*"'இருமோகக் கருநாகம் புணர்ந்து பின்னி
இணைவதுபோல் தெரிகின்ற உன்றன் கூந்தல்
திருக்கோலம் என்னென்பேன் கண்ணே' என்று
தினம் ஆண்கள் பெண்துணையைப் புகழுவார்கள்;
அருகிருந்து கூந்தலினைக் கோது வார்கள்;
அது – கருப்பே என்பதனால்; மாறி வெள்ளை
உருவெடுத்து விடுமானால் பின்னர் தேடி
ஒருபயல்தான் வருவானா? வருணிப் பானா?" (ப.31)*

இவ்வரிகளில் இடம்பெற்றிருக்கும் 'இருமோகக் கருநாகம் புணர்ந்து பின்னி, இணைவது போல் தெரிகின்ற கூந்தல்' என்னும் நெஞ்சை அள்ளும் உவமை, கருப்பு நிறம் மாறி கூந்தலில் பின்னர் வெள்ளை உருவெடுத்து விடுமானால் தேடி 'ஒருபயல்தான்' வருவானா, வருணிப்பானா? என்னும் வரிகளில் வெளிப்படும் உலகியல் வழக்கும் உளவியல் பாங்கும், பேச்சு வழக்குச் சொல்லாட்சி, நகைச்சுவை உணர்வு ஆகியன குறிப்பிடத்தக்கன.

மீராவின் கவியரங்கக் கவிதையில் மெல்லிய நகைச்சுவை உணர்வு களிநடம் புரிந்து நிற்கும் பிறிதோர் இடம் வருமாறு:

*"மோதும் பிறமொழியின் | மோகத்தால் சில தாயர்
'அம்மா' என்று அக்குழவி | அழைப்பதனை விரும்பாமல்
'மம்மி' என்றே சொல்லப் | பயிற்றுவிப்பார்; புரியாமல்
'அம்மி' என்று கூறும்;| அது சரிதான்... 'குழவி'க்(கு) ஓர்
'அம்மி'தானே அன்னை?| அடடா, மிகப் பொருத்தம்!"
(ப.78)*

"'குழவி'க்கு ஓர் 'அம்மி'தானே அன்னை? அடடா, மிகப் பொருத்தம்!": இயல்பான நகைச்சுவையின் ஆட்சி!

கவிஞர் முடியரசன் தலைமையில் 'ஆறு' என்னும் தலைப்பில் பாடிய கவியரங்கக் கவிதையிலும் மீராவின் நகைச்சுவை உணர்வு இயல்பாக வெளிப்பட்டிருக்கக் காண்கிறோம். மலர்ந்த வண்ண மலர்களின் திரளையும் மூலிகையையும் இலை தழையையும் சுமந்த படி ஆறு வருவதால் அதன் துறையில் நீராடும் பெண்களின் கூந்தலுக்கு நறுமணத்தைக் கொடுக்கும். இந்த உண்மையை அறியாது. 'பெண்களின் கூந்தலுக்கு இயற்கையில்

மணம் உண்டா? அல்லது செயற்கையான நறுமணப் பொருள்களைப் பூசிக்கொள்வதால் பெண்களின் கூந்தலுக்கு மணம் சேருகிறதா?' என்பது குறித்து இறைவனுக்கும் நக்கீரனுக்கும் இடையே முன்பு ஒருநாள் மதுரை மாநகரில் அனல் வாதம் எழுந்ததாம்! ஆனால், இங்கு இன்று இவ்வாதம் எழுவதற்கு வாய்ப்பே இல்லையாம். அப்படியே எழுந்தாலும் வாதம் எப்படி அமைந்திருக்கும் என்பதை மீரா தமக்கே உரிய நகைச்சுவை உணர்வோடு இவ்வாறு சுட்டிக் காட்டுகின்றார்:

"வாலிபத்தைப் போல் மலர்ந்த | வண்ண மலர்த்திரளை
மூலிகையை இலை தழையை | மோகித்துச் சுமந்தபடி
ஆறு வரும் போது | அழகாய் அமைந்த துறை
தோறும் புனலாடும் | தோகை மயிலார்தம்
கூந்தலுக்கு நறுமணத்தைக் | கொடுக்கும்;
இதையறியாது
ஏந்திழையார் கூந்தல் மணம் | இயற்கையிலா
செயற்கையிலா
என்று ஏதோ இறைவனுக்கும் | என் முன்னோன்
கீரனுக்கும்
அன்றொருநாள் இப்பதியில் | அனல்வாதம்
எழுந்ததுவாம்!
இங்குஇன்றோ இவ்வாதம் | எழுவதில்லை; எழுந்தாலும்
மங்கையர்தம் கூந்தல் | மணம்பற்றி இருக்காது
குயிலின் நிறமெடுத்துக் | கொண்டுள்ள கூந்தலே
'இயற்கையா செயற்கையா..' | என்றிருக்கும்
இல்லையா?" (பக்.112–113)

'பெண்களின் கூந்தலில் உள்ள மணம் இயற்கையா அல்லது செயற்கையா?' என்பது அன்று இறைவனுக்கும் நக்கீரனுக்கும் இடையே நிகழ்ந்த வாதத்தின் பொருளாம்! அந்த வாதம் இன்று நடந்தால் பெண்களின் கூந்தலில் உள்ள மணம் பற்றி இருக்காதாம்! 'பெண்களின் கூந்தலே இயற்கையா செயற்கையா?' என்று இருக்குமாம்! இந்த இயல்பான நகைச்சுவை உணர்வே மீராவின் படைப்பாளுமையில் தூக்கலாகக் காணப்பெறும் முத்திரைப் பண்பு ஆகும்.

**மோனையைப் போல் முன்னே நிற்கும் தமிழுணர்வு**

மீரா தமக்குத் தியாகராசர் கல்லூரியில் தமிழ் பயிற்றுவித்த ஆசிரியப் பெருமக்கள் மீது கொண்டிருக்கும் பற்று — வள்ளுவர் மொழியில் குறிப்பிட வேண்டும் என்றால் — 'மலையினும் மாணப் பெரிது' ஆகும்! 'ஆறு' என்னும் தலைப்பில் பாடிய ஒரு கவியரங்கக் கவிதையில் தாம் பயின்ற தியாகராசர் கலைக் கல்லூரியை 'ஆற்றங்கரையில் அமைந்திருக்கும் கலைக்கோயில்' எனப் போற்றும் மீரா, அக்கல்லூரியின் முதல்வர் பேராசிரியர் அ. சிதம்பரநாதனாருக்கு, 'தமிழ் வளர்க்கும் சிந்தைக்கு இனியர் சிதம்பரனார்' (ப.101) எனப் புகழாரம் சூட்டுகின்றார்.

உரைவேந்தர் ஔவை சு.துரைசாமி மீராவின் உள்ளங் கவர்ந்த ஒரு தமிழ்ப் பேராசிரியர் ஆவார். 'கருப்பு' என்னும் தலைப்பில் பாடிய கவியரங்கக் கவிதையில் அவரைத் தமக்கே உரிய தனிப்பாணியில் பின்வருமாறு போற்றிப் பாடியுள்ளார் மீரா:

*"மரைச்சாமி மலைச்சாமி தன்உ டம்பில்*
*மங்கைக்குஓர் இடம்தந்த சாமி ஆற்றங்*
*கரைச்சாமி சேலைகவர் வேலைச் சாமி*
*கையினிலே வாள் பிடித்த சாமி இன்னும்*
*தரைச்சாமி எவ்வளவோ இருந்தும் நானோ*
*தமிழ்ச்சாமி என்றால்தான் வணக்கம் செய்வேன்!*
*துரைசாமி என்சாமி! இந்நூற் றாண்டின்*
*தொல்காப்பி யச்சாமி! வணங்கு கின்றேன்"* (ப.28)

'சாமி' என்ற சொல்லை வைத்து இங்கே மீரா நிகழ்த்தி இருக்கும் சொல் விளையாட்டு சுவையானது; அவரது தமிழ் உணர்வுக்கும் முற்போக்கு மனப்பான்மைக்கும் கட்டியம் கூறி நிற்பது.

**கற்பனை வளமும் கருத்து நலமும்,**
**உணர்ச்சி வெளிப்பாடும் ஓசை நயமும்**

'மூன்றும் ஆறும்' தொகுதியில் இடம்பெற்றுள்ள கவியரங்கக் கவிதைகளில் கற்பனை வளம் செறிந்த பகுதிகள் உண்டு; கருத்து நலம் மிளிரும் இடங்களும் உண்டு. முன்னை இலக்கியத் தாக்கம் உண்டு; பின்னைப் புதுமைக் கூறுகளும் உண்டு. உணர்ச்சி கொப்பளித்து நிற்கும் இடங்கள் உண்டு; ஓசை நயம் சிறந்து

விளங்கும் இடங்களும் உண்டு. இவற்றிற்கான சான்றுகள் சிலவற்றை இங்கே காணலாம்.

'மூன்றும் ஆறும்' தொகுப்பு நூலில் இடம்பெற்றுள்ள ஒன்பது கவிதைகளுள் ஏழு கவிதைகளை மீரா கவியரசு முடியரசன் தலைமையிலேயே பாடியுள்ளார். அவற்றுள் 'கதிர்' என்னும் தலைப்பில் இராசிபுரம் இலக்கியப் பெருமன்ற விழாவில் பாடிய கவியரங்கக் கவிதையில் மீரா, கவியரங்கத் தலைவர் முடியரசனையும் அவையோரையும் விளித்திருக்கும் பாங்கு நயம் வாய்ந்தது.

*"அரங்கில்,*
*கதிரவன் போலக் கம்பீர மாக*
*விளங்கும் கவிஞர் வேந்தே, வணக்கம்!*
*கதிரவன் முகத்தைக் கண்டதா மரைபோல*
*மனமும் முகமும் மலர்ந்திருக் கின்ற*
*அன்பரீர், வணக்கம்! அன்னையீர், வணக்கம்!"*

*(பக். 119–120)*

'கதிர்' என்னும் கவிதைத் தலைப்பிற்கு ஏற்றதாக இவ்விளி அமைந்திருத்தல் குறிப்பிடத்தக்கது.

சிவகங்கை வள்ளுவர் இலக்கியப் பேரவையின் தொடக்க விழாவில் பாடிய கவியரங்கக் கவிதையில் மீரா,

*"முடியரசே! வீர | முரசரசே; காரைக்*
*குடியரசே! காவியப் பூங்|கொடியரசே! வணங்குகிறேன்"*

எனக் கவியரங்கத் தலைவர் முடியரசனைச் சுவை ததும்ப விளித்துத் தம் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டுள்ளார். இங்கே முடியரசன் வாழும் ஊர் காரைக்குடி என்பதால், 'காரைக்குடியரசே!' என்றும், அவர் படைத்த புகழ்பெற்ற காப்பியமான 'பூங்கொடி'யை நினைவுபடுத்தும் வகையில் 'காவியப் பூங்கொடியரசே!' என்றும் ஓசை நயத்தோடு விளித்திருக்கும் பாங்கு குறிப்பிடத்தக்கது.

வாழ்வில் உயர்வுக்கும் முன்னேற்றத்திற்கும் வெற்றிக்கும் தேவை உள்ளத் திண்மையே. 'திண்ணிய உள்ளம் நமக்கு இருந்தால் வாழ்வில் உயர்வது — வெற்றி பெறுவது உறுதி' என்பது மீராவின் அழுத்தம் திருத்தமான, ஆணித்தரமான கருத்து. இதனை அவர் தம் கவியரங்கக் கவிதை ஒன்றில் உணர்ச்சி பொங்கித் ததும்பும்

நடையில் இவ்வாறு எடுத்துரைப்பார்:

*"சாவா? நாம் சந்திப்போம்;*
*வாழ்க்கை நமக்கென்ன*
*பூவா? புறப்படுவோம்;*
*புல்லியரைத் தூள் செய்வோம்!"* (ப.23)

கவியரசர் பாரதியாரின் தோத்திரப் பாடல் ஒன்றில்,

*"வில்லினை எடடா – கையில்*
*வில்லினை எடடா – அந்தப்*
*புல்லியர் கூட்டத்தைப் பூழ்தி செய்திடடா?"*
*(பாரதியார் கவிதைகள், ப.39)*

என வரும் வீ(வை)ர வரிகள் இங்கே ஒப்புநோக்கத்தக்கன.

வானத்து நட்சத்திரங்களுக்கும் திங்களுக்கும் முறையே 'விண்மீன்கள்' என்றும், 'நிலவு' என்றும் பழந்தமிழர்கள் எப்படிப் பெயர் சூட்டி இருப்பார்கள்? கற்பனை நயம் மிளிரக் கவியரங்கக் கவிதை ஒன்றில் கவிஞர் மீரா கூறும் காரணங்கள் இதோ:

*"கலத்தில் ஏறிக் கடல்மேற் சென்ற*
*தமிழன் எவனோ தண்ணீர் மேடையில்*
*வெள்ளிப் பணங்களை வீசினாற் போலப்*
*பளிச்சென்று அழகாய் வெளிச்சங் காட்டித்*
*துள்ளும் மீனின் தொகையைக் கண்டு, பின்*
*நகைக்கும் வான நட்சத் திரங்களைக்*
*கண்டு, நல் ஒற்றுமை கண்டு வியந்து*
*'விண்மீன்கள்' என்று விளம்பினான் போலும்!..*
*அண்டை வீட்டில் சண்டை நிலவுகிறது*
*என்றுஎவ ரேனும் இயம்புவது உண்டா?*
*அமைதி நிலவுவ தாகத் தானே*
*அறைகின் றோம்நாம்! ஆர்ப்பரிக் காமல்*
*நெடுவானில் அமைதியாய் நிலவுவ தாலே திங்களை,*
*ஒருவன் 'நிலவென' உரைத்தான் போலும்!"* (ப.130)

ஒரு கூனற் கிழவி திண்ணையில் கால் நீட்டி உட்கார்ந்து இருக்கும் காட்சி எப்படி இருக்கும்? இதோ கவிஞரின்

அருமையான படப்பிடிப்பு:

*"...கூனற்கிழவி அதோஅத்*
*திண்ணையில் 'டகர' எழுத்துப் போல், கால்நீட்டி..*
*உட்கார்ந்துள்ளாள்"* *(ப.124)*

கவிஞரின் பதிவு நம் மனக்கண் முன்னே திண்ணையில் கால் நீட்டி அமர்ந்திருக்கும் ஒரு கூனற்கிழவியைக் கொண்டு வந்து நிறுத்திவிடுகின்றது.

'கருப்பு' நிறம் பற்றிப் பாடிய கவியரங்கக் கவிதையில் கவித்துவம் கொலுவிருக்கும் ஓர் உயிர்த் துடிப்பான இடம் இது:

*"முற்றாத மாந்தளிரின் உடலும் வண்டு*
*மொய்க்காத முல்லைப்பூப் பல்லும் கொண்ட*
*குற்றாலக் குறவஞ்சி பிரிவால் வெந்த*
*குறவன்தன் காதலியின் அடையா ளத்தைச்*
*சுற்றாமல் வளைக்காமல் நண்ப னுக்கும்*
*சுருக்கமாய்ச் சொன்னானாம்; என்ன சொன்னான்?*
*கற்றாரைப் போல்எங்கும் திரியும் வஞ்சி*
*'கருப்பினிலே அழகி' என்றான்; கம்பன்*
*தோற்றான்." (ப.30)*

'கருப்பில் அழகியடி — என் சிங்கி, கருப்பில் அழகியடி!' என்னும் குற்றாலக் குறவஞ்சியில் வரும் குறவனின் கூற்றில் சிறந்து விளங்கும் நயத்தையும் நுட்பத்தையும் இங்கே மீரா வெளிப்படுத்தி இருக்கும் அழகே அழகு! சுற்றாமல் வளைக்காமல் தன் காதலியின் அடையாளத்தை இரத்தினச் சுருக்கமாய் — இன்றைய மொழியில் குறிப்பிடுவது என்றால் — 'நச்சென்று' சொன்ன குறவனின் கூற்றுக்கு முன்னே, கவிச் சக்கரவர்த்தியான 'கம்பன் தோற்றான்!' என்கிறார் மீரா!

'ஆறில் இருந்து அறுபது வரை' என்பது உலக வழக்கு. மீராவோ ஓர் இடத்தில்,

*"பல்லில்லாக் கிழவர் முதல்*
*பால் மறவாப் பிள்ளை வரை"* *(ப.40)*

என நயமாகப் புதுமொழி ஒன்றைப் படைத்துள்ளார்.

"ஈக்கடியும் கொசுக்கடியும்
இருந்தாலும் தெரியாத
தேக்கடி" (ப.59)

என்பது தேக்கடி பற்றிய கவிஞரின் சுவையான பதிவு!

மீராவின் கருத்தில், கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியன அறிஞர் அண்ணா தம்மை 'ஈன்று புறந்தந்த இந்த நிலத்துக்குத் தந்த மூன்றுதிரு வாசகங்கள்' (ப.73) ஆகும்.

'பொருள் செயல் வகை' என்னும் தலைப்பில் மீரா பாடிய கவியரங்கக் கவிதையில் நகைச்சுவை உணர்வு பளிச்சிட்டு நிற்கும் ஓர் இடம்:

"விரித்துவைத்த கதிர்மணியை / விழுங்கவரும் கோழிகளை
விரட்டுதற்குக் குழைகழற்றி / வீசி எறிந்தாராம்
அந்நாள் மகளிரெல்லாம்;/ அச்செல்வச் சிறப்பெங்கே?
இந்நாளில் கழற்றுகிறார் / எதற்குஎன்றால்
அடகுவைக்க!" (ப.92)

இங்ஙனம் கற்பனை வளமும் கருத்து நலமும், உணர்ச்சி வெளிப்பாடும் ஓசை நயமும் சிறந்து விளங்கும் பகுதிகள் மீராவின் கவியரங்கக் கவிதைகளில் பரக்கக் காணப்படுகின்றன.

நிறைவாக, ஒரு கருத்து: பேராசிரியர் நா. இலக்குமணப் பெருமாள் நூலுக்கு எழுதிய தம் முன்னுரையில் குறிப்பிடுவது போல, 'கவிஞர் மீரா, கூட்டத்தினரின் சுவைக்கேற்பத் தம்மை முற்றிலும் அடிமைப்படுத்திக் கொள்ளாமல், தம் வழியில் அவர்களைத் திருப்ப முயல்வது வரவேற்கத்தக்கது' (ப.9). இதுவே மீராவின் கவியரங்கக் கவிதைகளில் பதிந்தும் பொதிந்தும் காணப்பெறும் ஒரு தனிப்பெரும் பண்பாகும்.

## 4. வசன கவிதை வித்தகர்

*"என்னைப் பொறுத்த வரையில் மீரா எனும் பாவலன், தனித்திறன் உடையவன். மரபுப் பாடல்களில் பல சித்து விளையாட்டுக்கள் கண்டவன். அவனது உரை வீச்சுக்கள் ஒப்பற்றவை. உள்ளடக்கமும் புதுமையுடையது; வடிவ யாப்பும் புதிய பரிணாமம் காட்டுவது."* — **தமிழண்ணல்***

கவிக்கோ அப்துல் ரகுமான் மரபு யாப்பில் (Conventional Metre) எழுதப்படாத புதிய கவிதை வடிவங்களைப் பின்வரும் மூன்று வகைகளாகப் பகுப்பார்:

1. கவி வசனம் (Poetic Prose)
2. வசன கவிதை (Prose Poem)
3. புதுக்கவிதை (New Verse)

கவி வசனத்தில் வசனத்தன்மை மிகுந்தும் கவிப்பண்பு குறைந்தும் இருக்கும். சிலப்பதிகாரத்தில் காணப்படும் உரைப்பாட்டுமடை இதற்கு நல்லதோர் எடுத்துக்காட்டு ஆகும்.

புதுக்கவிதை வசனத்தன்மைக்கு முற்றிலும் மாறுபட்டது. அது இயற்கையான பேச்சுச் சந்தத்தையும் (Speech rhythm), உணர்வு நிலைக்கு ஏற்ற அடி அமைப்பையும், புதிய உத்திகளையும் கையாள்வது. இன்னமும் கூர்மைப்படுத்திக் கூறுவது என்றால், 'வசன கவிதை' வசனத்திற்குப் பிறந்தது; 'புதுக்கவிதை' கவிதைக்குப் பிறந்தது.

"வசன கவிதை சொற்றொடர் அமைப்பில் வசன வடிவத்தைக் கொண்டிருக்கும். மரபு யாப்பின் சந்த ஒழுங்குகளை இதில் காண முடியாது. அழுத்தத்தையோ குரல் ஏற்ற இறக்கத்தையோ காட்டும் வகையில் வாக்கியங்கள் அடிகளாகப் பிரிக்கப்பட்டிரா.

---

* அறிவுமதி & கதிர் (தொகுப்பாசிரியர்கள்), காலத்தின் குரல், ப.214.

ஆனால் சொல்லும் பொருளாலும், முறையாலும் கவித்தன்மை பெற்றிருக்கும். அதாவது வசன வடிவில் இருந்தாலும் கட்டுரையாக இராது" (சோதிமிகு நவகவிதை, ப.33) என வசன கவிதையின் உயிர்ப் பண்புகளைத் தெளிவுபடுத்துவார் கவிக்கோ அப்துல் ரகுமான்.

**மீராவின் வசன கவிதைத் தொகுப்பு**

1971—ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் மீராவின் 'கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்' என்ற வசன கவிதைத் தொகுப்பு வெளிவந்தது. 'கவிதையல்ல; ஆக்கிக் கொள்ளலாம்' என்ற குறிப்போடு, 'முடிவுரை' என்னும் தலைப்பில் கவிஞரின் கருத்து தொகுப்பின் தொடக்கத்தில் மூன்று பக்க அளவில் இடம் பெற்றிருந்தது. 'என் வேட்கையே!' என்றும், 'என் சத்தியமே!' என்றும், 'என் அந்தரங்கமே!' என்றும் காதலியை உள்ளன்போடு விளித்து,

> *"இதோ, என் சொல்லோவியம்...*
> *நம் உள்ளப் புணர்ச்சிக்குப் பிறந்த*
> *உயிரோவியம்... உன் காலடியில் வைக்கிறேன்"*
>
> (முடிவுரை,ப.5)

எனக் காதலிக்குத் தம் நூலைக் காணிக்கையாக்கி இருப்பார் மீரா.

**சொல்லாட்சித் திறன்**

'செவ்விய, மதுரம் சேர்ந்த, நல்பொருளின், சீரிய, கூரிய, தீம்சொல் வவ்விய கவிஞர்' (பால காண்டம், நகரப் படலம், பா.1) எனக் கவிஞருக்குப் புகழாரம் சூட்டுவார் 'காப்பியத்தில் பெரிய கம்பர்'. அவரது கண்ணோட்டத்தில் செம்மையான, இனிமை பொருந்திய, கூறும் நல்பொருளால் சிறந்த, நுட்பமான, இனிய சொற்களைக் கவர்ந்து கொள்ளும் பெருமைக்கு உரியவர்கள் கவிஞர்கள் ஆவர். இவ் வரைவிலக்கணம் மீராவுக்கு— அவரது சொல்லாட்சித் திறனுக்கு — முற்றிலும் பொருந்தி வரக் காண்கிறோம்.

நியூட்டனின் கண்டுபிடிப்பு 'புவி ஈர்ப்புச் சக்தி' (Theory of Gravitation) என்பது அறிவியல் உலகம் நன்கு அறிந்த ஒன்று. கவிஞர் மீராவின் கண்டுபிடிப்பு 'உயிர் ஈர்ப்புச் சக்தி'யாம்! அவரது சொற்களிலேயே குறிப்பிடுவது என்றால்,

> *"நியூட்டன்*
> *புவிஈர்ப்புச் சக்தியைக்*

கண்டுபிடித்தான்.

நான்
என் உயிர் ஈர்ப்புச் சக்தியைக்
கண்டு பிடித்தேன்.

என் கண்டுபிடிப்பே,
நீ வாழ்க" (கவிதை 4: ப.14)

என வாழ்த்துவதாகக் கவிதை அமையும்

காதலைக் குறிக்கும் 'உயிர் ஈர்ப்புச் சக்தி' என்னும் மீராவின் சொல்லாட்சி புதியது; இதுவரை எவரும் கையாளாதது.

காதல் உலகம் வித்தியாசமான ஒன்று. அதில் கடைக்கண் பார்வை, புன்முறுவல், மென்மொழி ஆகியவற்றிற்கு உள்ள ஆற்றலே தனி. இதனை உணர்த்தும் மீராவின் ஓர் அழகிய வசன கவிதை:

"நீ முதல்முறை
என்னைத் தலைசாய்த்து
கடைக்கண்ணால் பார்த்தபோது
என் உள்ளத்தில்
முள் பாய்ந்தது.

அதை இன்னும் எடுக்கவில்லை.
முள்ளை முள்ளால் தானே

எடுக்க வேண்டும்?
எங்கே, இன்னொரு முறை பார்." (கவிதை 13: ப.25)

'ஒருகண் சிறக்கணித்தாள் போல நகும்' *(1095)* என்னும் வள்ளுவரின் சொல்லாட்சி, மீராவின் கைவண்ணத்தில் 'தலை சாய்த்து கடைக்கண்ணால் பார்த்தபோது' எனப் புதுக்கோலம் கொண்டுள்ளது. காதலியின் கடைக்கண் பார்வைக்கு உள்ள ஆற்றலை, 'என் உள்ளத்தில் முள் பாய்ந்தது' என்னும் அடி உணர்த்தி நிற்கின்றது. மேலும், 'முள் தைத்தது' என்று கூறுவது உலக வழக்கு. மீராவோ காதலியின் கடைக்கண் பார்வையின்

வீச்சினைப் புலப்படுத்தும் வகையில் 'முள் பாய்ந்தது' என்கிறார். 'முள்ளை முள்ளால் தான் எடுக்க வேண்டும்' எனத் தமிழக மக்களின் நாவில் தொன்றுதொட்டு வழங்கி வரும் பழமொழியை இக் கவிதையில் மீரா நயமுறப் பயன்படுத்திக் கொண்டுள்ளார். 'எங்கே, இன்னொரு முறை பார்' என்னும் கவிதையின் இறுதி அடி, 'மலரினும் மெல்லிய காதலின் செவ்வி தலைப்படும்' கவிஞரை அடையாளம் காட்டி நிற்கின்றது.

சொல்லும் பொருளாலும் முறையாலும் கவித்தன்மை கொலுவிருக்கும் மீராவின் வசன கவிதை ஒன்று:

"என் எழுதுகோல்
வெறும் எழுதுகோல் அல்ல.

தேசம் தழுவும்
பொதுவுடைமைக்கு
வரவேற்புரை எழுதும் போதும்

தேகம் தழுவும்
உனக்கு-
என் தனியுடைமைக்கு-
வாழ்த்துரை எழுதும்போதும்

என் எழுதுகோல்
வெறும் எழுதுகோல் அல்ல." (கவிதை 21 : ப.35)

இக் கவிதையில் பொதுவுடைமைக்குத் 'தேசம் தழுவும்' என்றும், தனியுடைமைக்குத் 'தேகம் தழுவும்' கவிஞர் தேர்ந்த அடைமொழிகளைக் கையாண்டிருப்பது சிறப்பு. இக்கவிதையில் காணலாகும் பிறிதொரு நயம் : பொதுவுடைமைக்குக் கவிஞர் எழுதுவது வரவேற்புரை. சமூக நோக்கில் தனியுடைமை என்பது கொடுமை. ஆனால், காதல் உலகில் தனியுடைமை என்பது இனிமை; அதற்குக் கவிஞர் வரைவது வாழ்த்துரை. 'என் எழுதுகோல் வெறும் எழுதுகோல் அல்ல' என்பது கவிதையின் தொடக்கத்திலும் முடிவிலும் கவிஞர் தரும் ஒப்புதல் வாக்குமூலம் ஆகும்.

## இலக்கியத் தாக்கம்

மீரா பழுத்த தமிழ்ப் புலமை கைவரப் பெற்ற ஒரு பேராசிரியர்; சங்க இலக்கியம், அற இலக்கியம், காப்பிய இலக்கியம் முதலான முன்னைப் பழைய இலக்கியங்களில் மட்டுமன்றி, பாரதியார் கவிதைகள், பாரதிதாசன் கவிதைகள் முதலான பின்னைப் புதிய இலக்கியங்களிலும் ஆழங்கால் பட்டவர். எனவே, அவரது வசன கவிதைகளில் ஆங்காங்கே சங்க அக இலக்கியப் பாடல்களின் தாக்கத்தினையும் காண முடிகின்றது; பாரதியார், பாரதிதாசன் முதலான இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்களின் செல்வாக்கினையும் அடையாளம் காண முடிகின்றது. வாழையடி வாழை என வரும் தமிழ் இலக் கியத்தின் தாக்கம் மட்டுமன்றி, இந்திய இலக்கியத்தின் தாக்கமும், உலக இலக்கியத்தின் தாக்கமும் மீராவின் படைப் பாளுமையில் சிறந்து விளங்குகின்றது. இந்திய இலக்கியச் சிற்பி களுள் இரவீந்திரநாத தாகூரும் காண்டேகரும், உலக இலக்கியப் படைப்பாளிகளுள் ஷேக்ஸ்பியரும் ஷெல்லியும் கலீல் கிப்ரானும் மீராவின் நெஞ்சைக் கொள்ளை கொண்டவர்கள் ஆவர்.

முன்னோர் மொழி பொருளே அன்றி அவரது சொல்லையும் பொன்னே போல் போற்றி எடுத்தாளுவது என்பது படைப்பாளி களிடம் காணப்படும் ஒரு பொதுப்பண்பு. இதற்கு ஒரு படி மேலாக, தம் தனித்தன்மை துலங்க முன்னோர் மொழி பொருளையும் சொல்லையும் கையாளுவது என்பது மீராவின் படைப்பாளுமையில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க ஒரு கூறு. ஓர் எடுத்துக்காட்டு:

*"இம்மை மாறி மறுமை ஆயினும்*
*நீஆகி யர்எம் கணவனை;*
*யான்ஆகி யர்நின் நெஞ்சு நேர்பவளே"*

*(குறுந்தொகை,49)*

என மொழிவாள் குறுந்தொகைத் தலைவி ஒருத்தி.

*"எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு*
*உற்றோமே ஆவோம் உமக்கே நாம் ஆட்செய்வோம்"*

*(திருப்பாவை,29)*

என்பது பாவை நோன்பு நோற்கும் பெண்களின் முடிந்த முடிபு.

*"இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச்*
*சிந்தையாலும் தொடேன்"*

*(சுந்தர காண்டம், சூடாமணிப் படலம், பா.33)*

என்பது கரம் பற்றிய நாளில் இராமன் சீதைக்குத் தரும் செவ்வரம்.

இவற்றை முழுமையாக உள்வாங்கிக் கொண்டு தம் தனித்திறன் துலங்க மீரா படைத்துள்ள வசன கவிதை இது:

*"'தெரியுமா..*
*போன பிறவியில்*
*நீயும் நானும் தம்பதிகளாய் இருந்தோம்'*
*என்கிறேன்.*

*இந்தப் பிறவியில் நாம் இருவரும்*
*இணைய வேண்டும் என்ற ஆசையால்தான்*
*அப்படிச் சொல்கிறேன்.*

*இது உனக்குத் தெரியாதா, என்ன?*

*நீயோ,*
*'அடுத்த பிறவியிலும்*
*நாமிருவரும் தம்பதிகள் தாம்*
*அதில் என்ன சந்தேகம்?'*
*என்கிறாய்.*

*இந்தப் பிறவியைப் பற்றி*
*எதுவும் சொல்லாமல்*
*என்னை அந்தரத்தில் தவிக்க விடுகிறாயே?'*

*(கவிதை 50: ப.73)*

போன பிறவி — அடுத்த பிறவி — இந்தப் பிறவி என மூன்று பிறவிகளையும் தொடர்புபடுத்திக் கவிஞர் இங்கே தம் ஆழ்மன உணர்வை வெளிப்படுத்தி இருக்கும் பாங்கு சிறப்பு.

திருக்குறள் காமத்துப்பாலில் வரும் 'புலவி நுணுக்கம்' அதிகாரம் திருவள்ளுவரது படைப்புத் திறத்தின் மணிமகுடம். அதில் வரும் தலைவி நுணுக்கமான காரணங்களைக் காட்டி தலைவனுடன் ஊடல் கொள்வாள். அதன் சாயலில் மீரா படைத்திருக்கும் அற்புதமான ஒரு வசன கவிதை:

"நீ தொடங்குகிறாய்;

'ஊருக்குப் போகிறேன்;
உங்களுக்குச் சங்கடமாக இருக்கிறதா?'

'ஆமாம் இரண்டு நாட்களுக்குச்
சங்கடமாகத்தான் இருக்கும்'.

'அப்படியானால்-------
அதற்குப் பின் சங்கடமாயிருக்காதோ?
சரியாய்ப் போய்விடுமோ?'
– நீ ஊடிப் பிணங்குகிறாய்.

'அதற்குப் பின்தான்
நீயே வந்து விடுவாயே.
இரண்டு நாட்களுக்கு மேல்
என்னைப் பிரிந்து உன்னால்
இருக்க முடியாதே'
– நான் உன் ஊடலை அணைக்கிறேன்.

உன் முகம்
பௌர்ணமிப் புன்னகை சிந்துகிறது."

(கவிதை 60: ப.85)

'நான் உன் ஊடலை அணைக்கிறேன்', 'உன் முகம் பௌர்ணமிப் புன்னகை சிந்துகிறது': கவித்துவம் களிநடம் புரிந்து நிற்கும் வரிகள் இவை. காதலியின் ஊடலைத் தணிப்பதாக — தீர்ப்பதாக — போக்குவதாக — கூறுவது பொதுவான, இலக்கிய வழக்கு; மீராவோ புதுவதாகக் ஊடலை அணைப்பதாக நயமுடன் படைத்துள்ளார். ஊடல் தீர்ந்த நிலையில் காதலியின் முகத்தில் தோன்றும் புன்னகையை 'பௌர்ணமிப் புன்னகை' என்னும் அழகிய தொடரால் மீரா சுட்டுவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

இலக்கிய மணம் கமழக் காதலியை உள்ளன்போடு விளிப்பதிலும் மீராவின் தனி முத்திரை படிந்திருக்கக் காண்கிறோம். இவ்வகையில் அவரது வசன கவிதைகளில் சிறந்து விளங்கும் இடங்கள்:

"என் மாதவிக் கொடியே!
நீ ஒருத்திதான்
பெண்! பெண்! பெண்!" (கவிதை 19: ப.33)

"என் இரண்டாம் சீதையே, எழு!" (கவிதை 31: ப.67)

முன்னதில் சிலப்பதிகாரச் செல்வாக்கும் பின்னதில் கம்ப ராமாயணத்தின் தாக்கமும் காணப்பெறுவது நெற்றித் திலகம்.

பாரதியாரைத் தமது தெய்வமாக வரித்துக் கொண்டவர் மீரா. 'காணி நிலம் வேண்டும்' பாரதியாரின் முத்திரைப் பாடல். இப்பாடலின் அடிச்சுவட்டில் நடை பயின்று மீரா புனைந்துள்ள ஒரு நயமான வசன கவிதை:

"என் மூதாதை ஒருவன்
பராசக்தியிடம் வரம் கேட்டான்.

காணி நிலம்
மாட மாளிகை
தென்னந்தோப்பு
அது இது என்று வேண்டி
இறுதியில்
ஒரு பத்தினிப் பெண்ணைக் கேட்டான்.

நான் கேட்டால்
உன்னை மட்டும்தான் கேட்பேன்.

உன்னைப் பெற்றால்
உலகத்தில் உள்ள
எல்லாம் பெற்ற மாதிரிதானே!" (கவிதை 28: ப.44)

'ஒரு தேர்ந்த படைப்பாளி தமது முன்னைய மரபைப் (Tradition) போற்றுவதோடும் பின்பற்றுவதோடும் நின்றுவிட

மாட்டார்; இன்னும் ஒரு படி மேலே சென்று, தமது தனித்திறன் (Individual Talent) துலங்கப் படைத்துக் காட்டுவதில் கண்ணும் கருத்துமாக இருப்பார்' என்பது இதுவரை நாம் கண்ட சான்றுகளால் உறுதிப்படுகின்றது.

**'உவமைக்கோர் மீரா!'**

மீராவின் வசன கவிதைகளில் 'உவமை என்னும் தவலருங் கூத்தி, பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து' பொலிவதைக் காண முடிகின்றது. பேராசிரியர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார் சாகித்திய அகாதெமியின் 'விடுதலைக்குப் பிறகு இந்திய இலக்கியம்' என்னும் நூலில், மீராவின் 'கனவுகள் + கற்பனைகள்= காகிதங்கள்' நூலை விடுதலைக்குப் பிறகு எழுந்த கவிதை நூல்களில் குறிப்பிடத்தகுந்தது என்கிறார்; மேலும், இந்நூலின் உவமைகள் புதியவை என்றும், குறிப்புப் பொருளாற்றல் நிரம்பியவை என்றும் புகழாரம் சூட்டுகின்றார்.

இக் கருத்தினை மெய்ப்பிக்கும் வண்ணம் அமைந்த மீராவின் உவமைகள் சிலவற்றை இங்கே காணலாம்.

*"நீ எனக்குக் காதலைத் தந்தாய்;*
*அது உழைப்பாளியின் வியர்வையைப் போல்*
*உயர்வானது.*

*நான் உனக்கு இந்த*
*வசன காவியத்தைத் தருகிறேன்;*
*இது ஏழையின் கண்ணீரைப் போல்*
*உண்மையானதா என்று பார்."* *(முடிவுரை, ப.4)*

— மீராவின் படைப்புள்ளத்தை அடையாளம் காட்டும் அற்புதமான உவமைகள் இவை. இங்கே உழைப்பாளியின் வியர்வைக்கும் ஏழையின் கண்ணீருக்கும் கவிஞர் தரும் ஏற்றம் நனி சிறந்தது. இத்தகைய உவமைகளின் ஆட்சி காதல் கவிதையின் வெளிப்பாட்டில் ஒரு புதிய பரிமாணத்தை ஏற்படுத்தியது எனலாம்.

ஒரு பொருள் மேல் மூன்று அடுக்கி வரும் கலித்தாழிசைகளைப் போல் ஒரே கவிதையில் உவமையும் பொருளும் ஒத்துச் செல்லும் விதத்தில் இரண்டு அல்லது மூன்று உவமைகளை

அடுக்கிக் கையாளுவதில் மீராவுக்குத் தனி ஈடுபாடு உள்ளது. இவ்வகையில் குறிப்பிடத்தக்க உவமை அடுக்குகள் இடம் பெற்றுள்ள சில வசன கவிதைகளை இங்கே சுட்டிக்காட்டலாம்.

"நான் உனக்குப் பூச்சூட்டுகிறேன்.
நீ சிரிக்கிறாய்.

புதிதாய்த்
தானம் கொடுக்கப் புறப்பட்டவன்
ஆள் தெரியாமல்
கர்ணன் வீட்டுக்
கதவைத் தட்டுவதைப் போல் –

புதிதாய்ச்
சாற்றுகவி பாடப் பழகியவன்
அடையாளம் தெரியாமல்
கம்பன் தெருவில்
கால் வைப்பதைப் போல் –

நான் உனக்குப் பூச்சூட்டுகிறேன்.

பூங்கொடியே,
நீ சிரிக்காமல்
என்ன செய்வாய்?" (கவிதை 61: ப.86)

என்னும் கவிதையில் இரு அழகிய உவமைகள் அடுக்கி வந்திருப்பதைக் காணலாம்.

உணர்வுமலி உவமைகள் மூன்று அடுக்கி வரும் போக்கிற்கு ஓர் எடுத்துக்காட்டு:

"ஏகாதிபத்தியத்தின்
கொடுமைக்கு இரையாகும்
ஒரு சிற்றரசைப் போல்
வாடி வருந்தும் என் மேனியைப் பார்.

*முதலாளித்துவத்தின்*
*சுரண்டலுக்குப் பலியாகும்*
*பாட்டாளி வர்க்கம் போல்*
*சாரம் இழக்கும் என் இளமையைப் பார்.*

*நிலப் பிரபுத்துவத்தின்*
*நீசக் கரத்தில் சிக்கிக் கிடக்கும்*
*கூலி விவசாயிகள் குடும்பம் போல்*
*வெந்து பொசுங்கும் என் வாழ்வைப் பார்."*

*(கவிதை 80: ப.114)*

ஏகாதிபத்தியத்தின் கொடுமைக்கு இரையாகும் சிற்றரசு: வாடி வருந்தும் கவிஞரின் மேனி; முதலாளித்துவத்தின் சுரண்டலுக்குப் பலியாகும் பாட்டாளி வர்க்கம்: சாரம் இழக்கும் கவிஞரின் இளமை; நிலப்பிரபுத்துவத்தின் நீசக் கரத்தில் சிக்கிக் கிடக்கும் கூலி விவசாயிகள் குடும்பம்: வெந்து பொசுங்கும் கவிஞரின் வாழ்வு — என இக் கவிதையில் மீரா கையாண்டிருக்கும் மூன்று உவமைகள் அவரது படைப்புத் திறத்தினைக் காட்டுவதோடு, அவர் தம் வாழ்விலும் வாக்கிலும் உயிரினும் மேலாகப் பெரிதும் போற்றிவந்த கருத்தியலையும் புலப்படுத்தி நிற்பது கண்கூடு.

*"நீ என்னை விட்டுப் பிரியப் போகிறாயா?..*

*பிழைக்கப் போன இடத்தில்*
*தன் கணவன் கள்வன் என்று*
*குற்றம் சாட்டப் பட்டதோடு*
*கொலையும் செய்யப்பட்ட*
*கொடுமையைக் கேட்டுக்*
*குலை நடுங்கிய ஒரு பத்தினியைப் போல்*
*என்னை நடுங்க வைக்கப் போகிறாயா?"*

*(கவிதை 79: ப.113)*

எனக் காதலியின் பிரிவாற்றாமைக்கு மீரா கையாண்டிருக்கும் உவமை, அவரது இலக்கியப் புலமைக்குக் கட்டியம் கூறி நிற்பது.

இங்கே சுருங்கிய சில சொற்களில் கண்ணகியின் பேரவலத்தைக் கவிஞர் உவமையாக வடித்துள்ள திறம் போற்றத்தக்கது.

*"உன்னிடம் எவ்வளவோ பேச வேண்டும்*
*என்று நினைக்கிறேன்...*

*நீ எதிரில்*
*தென்பட்ட நிமிடத்தில்*
*ஆசிரியரின் திடீரென்ற கேள்விக்குப்*
*பதில் சொல்ல முடியாத*
*ஒரு பள்ளிச் சிறுவனைப் போல்*
*பாவமாய் விழிக்கிறேன்" (கவிதை 36: ப.54)*

என்னும் உவமை கவிஞரின் நீண்ட கால ஆசிரிய அனுபவத்தின் பயனாய்ப் பிறந்த ஒன்றாகும்.

கவிதையின் பாடுபொருளுக்கு நெருக்கமாக இசைந்து நிற்கும் வண்ணம் ஆற்றல்சால் உவமைகளைப் படைக்கும் வல்லமை பெற்றவராகவும் மீரா விளங்குகின்றார். ஒரு நள்ளிரவில் நந்தவனத்தில் தனிமையில் சந்திக்கும் காதலியிடம், 'நம்மையும் மீறி இந்த உடல் பசி கொள்ளத் தொடங்கினால் என்ன செய்வது...?' எனக் கேட்கிறார் மீரா. 'நீங்கள் உடலைப் பற்றியே நினைக்கிறீர்கள். நானோ என் ஆன்மாவை உங்கள் திருவடிகளில் சமர்ப்பிக்க ஓடி வந்திருக்கிறேன்' என்கிறாள் காதலி. இந்த இடத்தில்,

*"நீ என் பார்வையில்*
*நெடுவேள் குன்றம்போல்*
*நிமிர்ந்து நிற்கிறாய்" (கவிதை 69; ப.100)*

என்னும் உயர்ந்த உவமையைக் கையாண்டு காதலிக்குப் புகழாரம் சூட்டுகின்றார் மீரா.

காதலியை / காதலனைப் பார்க்க ஏங்கும் ஏக்கம், பார்த்து ஏங்கும் ஏக்கம், பார்க்காமல் ஏங்கும் ஏக்கம் காதலில் மூவகையான ஏக்கங்கள் உண்டு.

*"வாசலில் நின்றவாறு*
*உன் வீட்டையே பார்க்கிறேன் –*
*எல்லையில் நின்றவாறு*

*நாடு கடத்தப்பட்ட ஒரு தேசாபிமானி*
*தன் நாட்டை ஏக்கத்தோடு பார்ப்பதைப் போல!"*
*(கவிதை 43: ப.64)*

எனக் காதல் ஏக்கத்திற்கு மீரா கையாண்டிருக்கும் உவமை தனித்தன்மை வாய்ந்தது; உணர்வு நலம் சான்றது.

இத்தகைய புதிய, பொருத்தமான, வித்தியாசமான, தனித்தன்மை வாய்ந்த உவமைகள் மீராவின் வசன கவிதைகளில் மண்டிக் கிடக்கின்றன.

### குறியீட்டு ஆட்சி

ஒரு பொருள் அதனோடு தொடர்புடைய பிறிதொரு பொருளைக் குறித்து நிற்கும் பொழுது குறியீடு ஆகிறது. ஒன்றுக்கு மாற்றாக நிற்கும் மற்றொன்று என்பதற்கும் மேலாக, பருப்பொருளின் துணையுடன் நுண்ணிய கருத்துக்களையும் உணர்வுகளையும் வெளிப்படுத்துவது குறியீடு ஆகும் என்பர். இத்தகைய குறியீடுகளை மீரா தம் வசன கவிதைகளில் திறம்படக் கையாண்டுள்ளார். பதச்சோறாக, குறியீட்டு உத்தி சிறப்பாக அமைந்த மீராவின் வசன கவிதை ஒன்றினை இங்கே காணலாம்:

*"என் கொல்லையில்*
*வாழை வைத்திருக்கிறேன்.*

*வாழை நன்றாக*
*வளர்ந்திருக்கிறது.*
*பூத்துக் காய்த்துப்*
*பூரித்து நிற்கிறது.*

*நீ*
*ஒரு வார்த்தை சொல்.*

*கொல்லையில் நிற்கும் வாழையை*
*வாசலில் கொண்டு வந்து வைக்கிறேன்."*
*(கவிதை 38: ப.56)*

காதல் வாழ்வின் கனிந்த குறியீடாக வாழை இக் கவிதையில் கையாளப்பட்டுள்ளது. நன்றாக வளர்ந்து, பூத்து, காய்த்து, பூரித்து

நிற்கும் வாழை, பருவத்தின் தலைவாசலில் இளமையும் அழகும் ததும்பி நிற்கும் காதலிக்குக் குறியீடு. என்றாலும், கொல்லையில் தனித்து நிற்கும் வாழை, கற்பில் இணையாமல் களவில் தனித்து நிற்கும் காதலியைச் சுட்டுகின்றது. வாசலில் இணையாய் நிற்கும் வாழை மங்கலத்தின் குறியீடு. இலை, பூ, காய், கனி, குலை, தண்டு, நார் எனத் தனது அனைத்து உறுப்புக்களாலும் பயன் நல்குவது வாழை. அது போலக் காதல் உணர்வு இளமை வாழ்வின் அனைத்து நிலைகளிலும் இன்பம் தருவது. இங்ஙனம் வாழை என்ற ஒரே குறியீட்டால் நுண்ணிய மன உணர்வுகளை இக் கவிதையில் மீரா திறம்பட வெளிப்படுத்தியுள்ளார்.

### கட்டமைப்பு சிறந்து விளங்கும் கவிதை

திருநீறு பூசிய நெற்றியுடன் வரும் காதலியைப் பார்த்து, "எந்தக் கோயிலுக்குப் போய்விட்டு வருகிறாய்?" என்று கேட்கிறார் மீரா. "முருகன் கோயிலுக்கு..." என்ற காதலியின் பதில் அவருக்குப் பஞ்சாமிர்தமாய் இனிக்கின்றது. "அவன் ஒரு மயில் மேல் மட்டுமல்ல, இரு மயில்களோடும் இருக்கிறான் என்பதை மறந்து விட்டாயா?." என இளமைக்கே உரிய குறும்புடனும் கேலியுடனும் காதலியிடம் கேட்கிறார் மீரா.

"அந்தத் துணிச்சலில்
அரைவாசியாவது
உங்களுக்கு இருந்தால்
இந்நேரம்...
என்றுதான் நினைத்துக் கொண்டு வருகிறேன்"

எனக் கோபம் கொப்பளிக்கக் காதலியின் பதில் உடனடியாக வேலாய் வந்து விழுகின்றது. "உன் பதில் வேலாய் வந்து விழுகிறது. நீ பொல்லாதவள்!" (கவிதை 63: ப.90) எனக் காதலியைப் பார்த்து மீரா கூறுவதோடு கவிதை நிறைவடைகின்றது.

மீராவின் இந்தக் கவிதை வசன கவிதை வடிவத்திற்குச் செம்மையான எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. முருகன் கோயிலோடு தொடங்கும் கவிதை, வேலோடு முடிவது ஒரு சிறப்பு. முருகன் கோவிலுக்கே உரிய பஞ்சாமிர்தம், அவனது மயில் வாகனம், வேல், துணைவியரான வள்ளி, தெய்வானை ஆகியோரைப் பற்றிய குறிப்பு ஆகியன இக் கவிதையில் இயல்பாக இணைந்து நிற்கக் காண்கிறோம். பேராசிரியர் அப்துல்

காதர் குறிப்பிடுவது போல், "கவிதையின் எல்லா உறுப்புக்களும் உரிய வகையில் ஒன்றிணைந்து, எத்தகைய உணர்வு உருவங்கொள்ள வேண்டும் என்று மீரா விரும்பினாரோ, அந்தக் கலைவடிவம் பூரணமாக வெளிப்படுமாறு கவிதை அமைந்திருக்கிறது" *(மீராவின் கனவுகள், ப.119).*

"அந்தத் துணிச்சலில் / அரைவாசியாவது / உங்களுக்கு இருந்தால் / இந்நேரம் .." எனக் காதலியின் கூற்றாக இக் கவிதையில் இடம்பெற்றிருக்கும் வரிகள் திட்பமும் நுட்பமும் பொருந்தியனவாகும். ஒன்று, ஊரார் பேசும் அலருக்கு— பழிமொழிகளுக்கு — ஒரு முடிவு சுட்டி இருக்கலாம்; மற்றொன்று, தடைகள் மிகுந்த களவு வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைத்து, பாதுகாப்பான கற்பு வாழ்க்கையில் அடியெடுத்து வைத்திருக் கலாம்; முத்தாய்ப்பாக, கபிலர் குறிஞ்சிப்பாட்டில் கூறுவது போல், 'இருவேம் ஆய்ந்த மன்ற'லாம் களவு வாழ்வில் இருந்து, 'நாடறி நன்மணம்' என்னும் கற்பு வாழ்க்கைக்கு மாறி இருக்கலாம்.

### மீராவின் கல்லறை வாசகம்

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை வரலாற்றில் குறிப்பாக, வசன கவிதை உலகில் — மீராவின் 'கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்' தனிமுத்திரை பதித்த படைப்பு ஆகும். சுருங்கக் கூறின், இந்நூல் எழுத்துலகிலும் இளையோர் உலகிலும் ஒரு காதல் அலையையே ஏற்படுத்தியது எனலாம். கவிஞர்கள் பலர் அதைப் பின்பற்றி எழுதத் தொடங்கினர். கவிதை உலகில் மட்டுமன்றி, படைப்பாளி என்ற முறையில் மீராவின் உள்ளத்தையும் பெரிதும் தாக்கத்தினை ஏற்படுத்திய நூல் 'கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்.' மேலைநாட்டு அறிஞர் ஜி.யு. போப் தம் கல்லறையில் 'தமிழ் மாணவன்' என்று எழுதச் சொன்னது போல மீரா,

*"என் கல்லறையில் எழுதுங்கள்:*
*கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்"*

(கோடையும் வசந்தமும், ப.180)

எனக் குறிப்பிட்டிருப்பது இங்கே மனங்கொளத்தக்கது.

## 5. ‘அங்கதத்திற்கோர் மீரா!’

*“இவர் (மீரா) கையாளும் அங்கத முறை மிக அழுத்தமும் ஆழமும் உடையதாக விளங்குகிறது. இப் பண்பே இவரது தனித்தன்மையாக விளங்கக் காணலாம்.”*

*– மு.அருணகிரி**

ஆங்கில மொழியில் ‘Satire’ என்பது தமிழில் அங்கதம் என்று வழங்கப்படும். தமிழில் காலத்தால் முற்பட்ட தொல்காப்பியத்திலேயே அங்கதம் குறித்து நான்கு நூற்பாக்கள் (1381—1383;1386) இடம் பெற்றிருப்பது நோக்கத்தக்கது. தொல்காப்பியர் கருத்தில் அங்கதச் செய்யுள் இரு வகைப்படும். ஒன்று, செம்பொருள் அங்கதம். இது நேர்பொருள் உடையது; வெளிப்படையாக ஒருவரது குற்றங் குறையைச் சொல்வது; பளிச்சென்று கூறுவது; ‘வசை’ எனப்படுவது. மற்றது, பழிகரப்பு அங்கதம். இது வசையை அதற்கு உரிய சொல்லால் சொல்லாது, மறைத்துச் சொல்வது; அதாவது, மொழி கரந்து சொல்வது; இப் பழிகரப்பு அங்கதமே அங்கதச் செய்யுள் என்பதற்குப் பொருத்தம் மிக்கது என்பர் பேராசிரியர் தமிழண்ணல் (தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், ப.476). அங்கதம் எள்ளற் குறிப்புடையது; நகையாடலுடன் கூடியது; பழித்துப் பேசித் திருத்த முயல்வது.

“ஒருவனுடைய குறையையோ ஒரு சமூகத்தாரின் குறையையோ, அன்னார் நெஞ்சில் உறுத்தும் வண்ணம் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் கூறுதல் அங்கதமாகும். அங்ஙனம் கூறுங்கால், நகைச்சுவை தோன்றக் கூறுதல் இன்புறத்தக்கதொன்றாகும்” (உரைநடைக் கோவை: இரண்டாம் பாகம், ப75) என்னும் பண்டிதமணி மு. கதிரேசனாரின் விளக்கம் இங்கே மனங்கொளத் தக்கதாகும்.

**மீராவின் ‘ஊசிகள்’ : அங்கதக் கவிதைகளின் தொகுப்பு**

இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்களுள் மீராவின் கவிதைகளில் அங்கதம் பயின்று வருவதைக் காண முடிகின்றது. 1974—ஆம் ஆண்டில் முதற்பதிப்பு கண்ட அவரது ‘ஊசிகள்’ தொகுப்பு ‘அங்கதக் கவிதைகளின் தொகுப்பு’ (A Collection of

---

* தமிழ் இலக்கியத்தில் அங்கதம், ப.245.

Satirical Verses in Tamil) என்னும் சிறப்புக் குறிப்புடன் வெளிவந்தது இங்கே நினைவுகூரத்தக்கது. கவிக்கோ அப்துல் ரகுமான் குறிப்பிடுவது போல், "'குத்த'லாக எழுதப்பட்டிருக்கிற இந்தக் கவிதைகளுக்கு 'ஊசிகள்' என்ற பெயர் நயமாகத்தான் படுகிறது" ('பரிசோதனை', ஊசிகள், ப.4). "என்னைப் பொறுத்த வரை இலக்கிய உப்பரிகையில் உலாவுவதை விடச் சமுதாய நடைபாதைகளைச் செப்பனிடுவதையே முக்கியமாகக் கருதுகிறேன்" (ஊசிகள், ப.4) என ஒப்புதல் வாக்குமூலம் தரும் கவிஞர் மீரா, சமுதாய நடைபாதைகளைச் செப்பனிடுவதற்கு அங்கதத்தை ஆற்றல் மிக்க ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொண்டுள்ளார். நயமான நகைச்சுவை உணர்வும் வெளிப்படும் வண்ணம் அவர் சிறந்த அங்கதக் கவிதைகளைப் படைத்துத் தந்துள்ளார்.

அரசியல் அங்கதம் (Political Satire), சமூக அங்கதம் (Social Satire), சமய அங்கதம் (Religious Satire), தனிமனித அங்கதம் (Personal Satire) என்றாற் போல் மீராவின் அங்கதக் கவிதைகளைப் பல்வேறு கோணங்களில் நாம் பகுத்துக் காணலாம்.

### அரசியல் அங்கதம்

அங்கதக் கவிதை வடிவங்களுள் மீராவுக்குப் பெரிதும் ஆகி வந்திருப்பது அரசியல் அங்கதமே. அவர் மிகுதியாகக் கையாண்டிருப்பதும் இவ் வகை அங்கதக் கவிதைகளே. இவ்வகையில் சிறப்பாக அமைந்த சில கவிதைகளை இங்கே காணலாம்.

'சுதந்திரம் எனது பிறப்புரிமை' என உணர்ச்சிப் பெருக்கோடு முழங்கினர் விடுதலைக்காகப் பாடுபட்ட அன்றைய தலைவர். இன்றைய அரசியல்வாதிகளோ, 'சுரண்டல் எங்கள் பிறப்புரிமை' என முழக்கம் இடுகின்றனர். இதனைப் 'பழக்கம் பொல்லாதது' என்னும் கவிதையில் தமக்கே உரிய அங்கதப் பாணியில் எள்ளி நகையாடுகின்றார் மீரா. ஆராவமுதனுக்குத் திடீரென்று அமைச்சர் பதவி பறிபோயிற்றாம். அமைச்சர் பதவியை இழந்து வருந்தி இருந்த ஓர் இரவில் அவரால் அமைதியாகத் தூங்க முடியவில்லையாம். அருகில் தூங்கிய தமது ஆசை மனைவியைச் சும்மா சும்மா சுரண்டலானாராம் அவர். இந்நிலையில்,

"ஏன்தான் உங்களுக்கு / இன்னும் அந்தப்
பொல்லாப் பழக்கம் / போகவில்லையோ?"

(ஊசிகள், ப.21)

என அம்மா கேட்டாராம் ஆத்திரத்தில்.

'ப — பசித்திரு; த—தனித்திரு; வி—விழித்திரு. இம் மூன்று சொற்களின் முதல் எழுத்துக்களையும் ஒன்று சேர்த்தால் வருவது பதவி' என்பர். ஆயின், இன்றைய அரசியல் உலகம் பதவியை நோக்கும் விதமே தனி. மீராவின் 'ஆனை மாதிரி' என்னும் கவிதை இன்றைய அரசியல்வாதிகளின் பதவி மோகத்தினை அங்கதக் குறிப்போடு சாடுகின்றது.

*"அப்புசாமியின் / அப்பா / ஆனை மாதிரி!*

*இருந்த போது / எம்.பி. பதவி...*
*இறந்த போது / சிவலோக பதவி...*

*அப்புசாமியின் / அப்பா / ஆனை மாதிரி!"*

*(ஊசிகள், ப.24)*

'யானை இருந்தாலும் ஆயிரம் பொன்; இறந்தாலும் ஆயிரம் பொன்' என்ற பழமொழியை இங்கே தம் கருத்துப் புலப்பாட்டிற்குத் திறம்படப் பயன்படுத்திக் கொண்டுள்ளார் மீரா.

'மேயர் மகன் தோட்டி மகனுக்குக் கூறியது', 'தலைகுனிவு?' என்னும் மீராவின் இரு கவிதைகளும் உரையாடல் பாங்கும் அங்கதச் சுவையும் ஒருசேரச் சிறந்து விளங்கும் அரசியல் அங்கதங்கள் ஆகும். முதல் கவிதையில் மேயர் மகன் தோட்டி மகனுடன் பின்வருமாறு உரையாடுகின்றான்;

*"குப்பா! குப்பா!*
*உன்னைப் பெற்ற தந்தைக்கு*
*உன்னைத்தானே/ அடிக்கத் தெரியும்?*

*என்னைப் பெற்ற தந்தைக்கு*
*இந்த ஊரையே/ அடிக்கத் தெரியும்!*

*இப்போதேனும் / ஒப்புக்கொள்ளேன்*
*என்றன் தந்தை / தானே பெரியவர்..?*
*வணக்கத்திற்குரியவர்!"* *(ஊசிகள், ப.19)*

தோட்டி தன் மகன் குப்பனை அடிப்பது உடம்பில் மட்டுமே; ஆயின், 'வணக்கத்திற்குரிய' மேயர் அடிப்பதோ ஊர் மக்களின் வயிற்றில். எனவே, 'இப்போதேனும் ஒப்புக் கொள்ளேன், என்றன் தந்தை

தானே பெரியவர்? வணக்கத்திற்குரியவர்?' என மேயர் மகன் தோட்டி மகனுக்குக் கூறுவதில் அங்கதச் சுவை பளிச்சிடக் காண்கிறோம்.

'தலைகுனிவு?' என்னும் கவிதையில் பாரதச் செல்வனும் அந்நியச் சிறுவனும் தத்தம் நாட்டுப் பெருமை குறித்துப் பேசிக் கொள்கின்றனர். "எங்கள் நாட்டில்/ நாய்கள் பற்பல/ குட்டிகள் போடும்.." என்கிறான் பாரதச் செல்வன். "எங்கள் நாட்டில் / மட்டும் என்னவாம்?" என எதிர்க்கேள்வி கேட்கிறான் அந்நியச் சிறுவன். அடுத்து, "எங்கள் நாட்டில் / பன்றிகள் / பற்பல / குட்டிகள் போடும்.." என்கிறான் பாரதச் செல்வன். இதற்கும், "ஆச்சர்யம் இதில் / என்னவாம்?./ அங்கும் அப்படியே/" என இயல்பாய் மறுமொழி கூறுகிறான் அந்நியச் சிறுவன். மூன்றாவதாக, "எங்கள் நாட்டில் / கட்சிகள் பற்பல/ குட்டிகள் போடும்..." என்கிறான் பாரதச் செல்வன். இம்முறை அந்நியச் சிறுவனால் உரையாடலைத் தொடர முடியவில்லை. 'அந்நியச் சிறுவன் / அமைதியாகத் / தலையைக் கீழே தொங்கப் போட்டான்' (ஊசிகள், பக். 60—61) எனக் கவிதையை அங்கதச் சுவை கொப்பளிக்க முடித்து வைக்கிறார் மீரா. தலையைக் கீழே தொங்கப் போடுவது என்னவோ அந்நியச் சிறுவன் ஆனாலும், 'தலைகுனிவு யாருக்கு?' என்னும் கூரிய வினா படிப்பவர் சிந்தனையில் தொக்கி நிற்கும் வண்ணம் கவிதையை நகர்த்திச் சென்றுள்ளார் மீரா.

"அங்கதம் என்பது கத்தியைப் போல வெட்டு ஒன்று, துண்டு இரண்டு என இருக்க வேண்டும். மாறாக, ரம்பத்தைப் போல அது இழுத்து இழுத்து அறுத்துக்கொண்டே இருக்கக் கூடாது" (Satire shoud be like a sword, but not a saw, it should cut and not mangle) என ஆங்கில அகராதி குறிப்பிடுவதற்கு ஏற்ப, கவிஞர் மீராவின் அரசியல் அங்கதக் கவிதைகள் கூர்மையும் சீர்மையும் ஒருசேரப் பெற்றனவாக விளங்குகின்றன.

சமூக அங்கதம்

அரசியல் அங்கதத்திற்கு அடுத்த நிலையில் மீராவின் கவிதைகளில் சிறப்பிடம் பெறுவது சமூக அங்கதம் ஆகும். சமகாலக் காதலின் போக்கு, கல்வி வணிகம் ஆகிவிட்ட அவலம், பெருகி வரும் ஊழல், வறுமைக் கொடுமை, பட்டிமன்றங்களின் இழிநிலை முதலான இன்றைய சமூக அவலங்களை அங்கதச் சுவையோடும் நகைச்சுவை உணர்வோடும் சித்திரித்துக் காட்டுவதில் மீராவுக்குத் தனிஈடுபாடு உள்ளது. இவ் வகையில் அவருக்குப் பழந்தமிழ் இலக்கியப் பயிற்சி பெரிதும் கைகொடுத்துள்ளது.

*"யாயும் ஞாயும் யாரா கியரோ?*
*எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?*

*யானும் நீயும் எவ்வழி அறிதும்?*
*செம்புலப் பெயல்நீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே"* *(40)*

எனக் குறுந்தொகைப் பாடல் ஒன்று சங்க காலக் காதலின் சீரினையும் சிறப்பினையும் போற்றிப் பாடுகின்றது. இத்தகைய 'செம்புலப் பெயல்நீர்க் காதல்' எல்லாம் இன்று நடைமுறையில் இல்லை. இன்றைய காதல் மீராவின் பார்வையில் 'நவயுகக் காதல்' ஆகும்.

செம்புலப் பெயல்நீராரின் முன்னைய குறுந்தொகைப் பாடலை அடியொற்றி மீரா படைத்துள்ள ஏளனக் கவிதை— நையாண்டிப் போலி (Parody) — 'நவயுகக் காதல்'. 'நேற்று வரை நீ யாரோ, நான் யாரோ? இன்று முதல் நீ வேறோ, நான் வேறோ?' என்றாற் போல் காதலன் தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட காதலியிடம் உரையாடியது சங்க காலத்துச் 'செம்புலப் பெயல்நீர்க் காத'லில்! இன்றைய 'நவயுகக் காத'லோ முற்றிலும் மாறானது; ஊர் பார்த்து, உறவு பார்த்து — சாதி பார்த்து, மதம் பார்த்து — சொந்தம் பார்த்து, சொத்துக் கணக்குப் பார்த்து, காரண காரிய அடிப்படையில் எழுவது. இதில் காதலன் காதலியிடம் எப்படி எல்லாம் பேசுவான் தெரியுமா?

*"உனக்கும் எனக்கும்*
*ஒரே ஊர் – / வாசுதேவ நல்லூர்...*

*நீயும் நானும்*
*ஒரே மதம்.../திருநெல்வேலிச்*
*சைவப் பிள்ளைமார் வகுப்புங்கூட...*

*உன்றன் தந்தையும்/என்றன் தந்தையும்*
*சொந்தக்காரர்கள்–/மைத்துனன்மார்கள்...*

*எனவே/செம்புலப் பெயல்நீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாம்கலந்த னவே" (ஊசிகள், ப.50)*

முத்திரை பதித்த குறுந்தொகைப் பாடலின் இறுதி இரண்டு அடிகளை இங்கே மீரா எத்துணை ஏளனக் குறிப்போடு நயமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கின்றார் என்று பாருங்கள்!

'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும், பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே' (புறநானூறு, 183) என எந்த வேளையில்

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாடினாரோ, 'உறுபொருள் கொடுத்தே' கல்வியைப் பெற வேண்டிய சூழல் இன்று உருவாகிவிட்டது. வேறு சொற்களில் குறிப்பிடுவது என்றால், பாவேந்தர் பாரதிதாசனின் வாக்கினைச் சற்றே மாற்றி, 'விலை போட்டு வாங்க வா, முடியும் கல்வி' என்ற அவல நிலை இன்றைய நடைமுறை ஆகிவிட்டது. 'கேடில் விழுச்செல்வம்' எனப் போற்றப் பெற்ற கல்வி, இந்நூற்றாண்டில் வணிகம் ஆகிவிட்டது; 'கற்கை நன்றே கற்கை நன்றே, பிச்சை புகினும் கற்கை நன்றே' என்னும் ஆன்றோர் வாக்கு, வெறும் வார்த்தையாக இல்லாமல், வாழ்க்கை ஆகி வரும் கொடுமை இன்று பெரும்பாலான நடுத்தரக் குடும்பங்களில் அரங்கேறி வருகின்றது. இந்த அவல நிலையினைக் 'கல்வி சிறந்த தமிழ்நாடு' என்னும் கவிதையில் அங்கத உத்தியைக் கையாண்டு அம்பலப்படுத்தியுள்ளார் மீரா.

*"பி.யு.சி.யா / ஒரு நூறு போதும்.*

*பி.எஸ்சி. பி.எட். / இருநூறு ஆகும்.*

*எம்.எஸ்சி. ஆயிரம் / எம்.பி.பி.எஸ். / ஏழு ஆயிரம்.*

*இங்கே / சேர வாரும் / செகத்தீரே!" (ஊசிகள், ப.69)*

இக் கவிதையின் உருவாக்கத்தில் பாரதியாரும் ('கல்வி சிறந்த தமிழ்நாடு' என்பது பாரதியாரின் தொடர்), தாயுமானவரும் ('சேர வாரும் செகத்தீரே!' என்னும் விளித்தொடர் தாயுமான வருடையது) மீராவுக்குப் பெரிதும் கைகொடுத்துள்ளனர். வேடிக்கை — இல்லை, வேதனை என்ன என்றால் — இக் கவிதையில் நூறு, இருநூறு, ஏழு ஆயிரம் எனச் சுட்டப் பெற்றிருக்கும் விலைப்பட்டியல் எழுபதுகளில் நடைமுறையில் இருந்தது; இன்றோ அதன் வளர்ச்சி பன்மடங்கு பெருகி யிருப்பது நெற்றித் திலகம்.

'தமிழன் என்றோர் இனமுண்டு; தனியே அவர்க்கொரு குணம் உண்டு.' என்ன குணம் அது? வேறு என்ன, தீராத திரைப்பட மோகம்தான்! இதனைத் தோலுரித்துக் காட்டுகின்றது மீராவின் 'பெருங்காயம்' என்னும் கவிதை. அக் கவிதை தரும் சிந்தனைக்குரிய செய்திகள் மூன்று:

1. "மேக மலையில் / விமான விபத்து...
மூன்று பேர்க்கு / முதுகில் காயம்

2. ஜெஸ்ஸுூர் முனையில் / நடந்த சண்டையில்
முப்பது பேர்க்கு / முகத்தில் காயம்

3. சித்திரை வீதியில் / சினிமா நடிகை
ஸ்ரீஸ்ரீஸ்ரீயைத் / திக்குமுக்காடச்
செய்த கும்பலில் / சிக்கிய அறுபது பேர்க்கு
முதுகில் / முகத்தில் / நெஞ்சில் காயம்!"

(ஊசிகள், ப.29)

விமான விபத்தில் சிக்கி மூன்று பேர்க்கு முதுகில் மட்டும் தான் காயம்; போர் முனையில சண்டையிட்ட முப்பது பேர்க்கும் முகத்தில் மட்டும் தான் காயம்! ஆனால், சித்திரை வீதியில் சினிமா நடிகை **ஸ்ரீஸ்ரீஸ்ரீ**யைத் திக்குமுக்காடச் செய்த கும்பலில் சிக்கிய அறுபது பேர்க்கு முதுகிலும் முகத்திலும் நெஞ்சிலும் காயமாம்! காயம் அடைந்தவர்களின் எண்ணிக்கையை மூன்று — முப்பது — அறுபது எனப் படிப்படியே வளர்த்துச் செல்வதிலும், காயம் ஏற்பட்ட இடங்களாக முதுகு — முகம்— முதுகிலும் முகத்திலும் நெஞ்சிலும் காயம் எனக் குறிப்பிடு வதிலும் நல்ல அங்கதச் சுவை ததும்பி நிற்கக் காண்கிறோம்.

பாவேந்தர் பாரதிதாசன் இன்று இருந்திருந்தால், 'எங்கெங்குக் காணினும் ஊழலடா! ஏழு கடல் அதன் வண்ணமடா!' என்று ஊழலின் பெருக்கத்தைப் பற்றி வியந்து பாடி இருப்பார்! கவிஞர் ஒருவர் நகைச்சுவையாகக் குறிப்பிட்டது போல், இன்றைய அரசு அலுவலகக் கதவுகளில் (கையூட்டினைத்) 'தள்ளு' என்றும், கையூட்டு தந்து கவனிக்காவிட்டால் (காரியத்தை முடித்துக் கொடுக்காமல்) 'இழு' என்றும் சரியாகத்தான் எழுதிப் போட்டிருக்கிறார்கள்! ஊழலின் பரிமாணத்தில் ஒரு வித்தியாசமான கோணத்தினை அங்கதக் குறிப்புடன் கவிதைப் பாடுபொருள் ஆக்கியுள்ளார் மீரா.

"வீர வலசை / விவசாயி போல
மாறுவேடத்தில் / மந்திரி வந்தார்...
ஆட்சித் தலைவர் / அலுவலகத்தில்
உட்கார்ந்திருந்தவோர் / ஊழியரிடம் போய்

*விவரம் ஏதோ / வேண்டும் என்றார்;*
*இரண்டு தாளை / எடுத்து நீட்டினார்.*

*மாட்டேன் என்றே / மறுத்தார் ஊழியர்.*

*மந்திரி மகிழ்ந்தார்;*
*தம்துறை ஊழியர் / நேர்மையை நினைத்து*
*நெஞ்சங் குளிர்ந்து / சென்றார் வெளியே...*

*சென்றதும் ஊழியர் / திருவாய் மலர்ந்தார்...*
*'பத்து ரூபாய்க்கா / பார்த்துச் சொல்வேன்*
*அவ்வளவு எளிதாய்?/ அலையவிட்டு நான்*
*அப்புறம் கறப்பேன் / அறுபது எழுபது..."*

**(ஊசிகள், பக்–.40–&41)**

'ஓடுமின் ஓட, உறுமீன் வருமளவும் காத்திருக்குமாம் கொக்கு' என்பது போல வழி மேல் விழி வைத்துக் காத்திருக்கும் ஊழல் பேர்வழிகளின் சுயரூபத்தினைத் தோலுரித்துக் காட்டும் அங்கத உத்திக்கு இக்கவிதை சிறந்ததொரு சான்று ஆகும்.

'இல்லை என்ற சொல்லை இல்லயாக வைப்பேன்!' என்றும், 'வறுமை என்பதை மண்மிசை மாய்ப்பேன்' என்றும் என்னதான் தலைவர்கள் உரத்த குரலில் ஓங்கி முழங்கினாலும் வறுமை நம் நாட்டை விட்டு நீங்கிய பாடில்லை; வறுமைக் கோடும் அழியவே இல்லை. இந்நிலையில் தலைவர் ஒருவர் வறுமையை உடடினயாக வெளியேற்றிய பங்கினை மீராவின் 'ஊசி' ஒன்று அங்கதமாக — நெஞ்சைப் பிழியும் அவலக் காட்சி யாக — படம்பிடித்துக் காட்டுகின்றது. 'வறுமையை ஒழிப்போம்' என்னும் தலைப்பில் அமைந்த அக் கவிதை கவிஞரின் சொற்களில் வருமாறு;

*"எட்டு மாதமாய் / எங்கள் தலைவர்*
*தெருவில் நின்று / செழிக்கச் செய்தார்*
*முழக்கம்... / வறுமை*
*வெளியேறிற்றா / விரைவாய்...?*

*நேற்று / செட்டியார் வீட்டுத்*
*திருமணப் பந்தியில் / எதுவும் பேசாது*
*எங்கள் தலைவர் / எட்டி உதைத்தார்...*
*வறுமை / வேகவேகமாய் / வெளியேறிற்று...*

*பரட்டைத் தலையும் / எலும்பும் தோலும்*
*கிழிந்த கந்தையுமாக"* *(ஊசிகள், ப.16)*

'பரட்டைத் தலையும் எலும்பும் தோலும் கிழிந்த கந்தையுமாக வேக வேகமாய் வெளியேறிற்று வறுமை' என்னும் கவிஞரின் முத்தாய்ப்பான முடிப்பு வரிகளில் வெளிப்படும் அங்கதச் சுவை அழுத்தம் திருத்தமானது; ஆழமானதும்கூட.

அங்கத உத்தி சிறந்து விளங்கும் மீராவின் பிறிதொரு கவிதை 'இரண்டு பிணங்கள்'. இரண்டு பிணங்கள் எதிரெதிரே கிடத்தப் பட்டிருக்கின்றன. மருத்துவர் வருகிறார்; அறுத்துப் பார்க்கிறார்; தற்கொலை என்கிறார்; செல்கிறார். அடுத்து, கவிஞரின் சொற்களில் அக்கவிதை இப்படித் தொடர்கின்றது.

*"நடைப்பிணமாக / நாளைக் கழித்து*
*நாடகம் முடித்த தொன்று...*
*கடைப்பிணமாகக் / காசைப் பெருக்கிக்*
*கதையை முடித்த தொன்று...*
*இரண்டு பிணங்கள் எதிரெதிரே!*

*மூட்டை தூக்கிப் / பிழைக்கவும் முடியாப்*
*பூச்சி, / மூட்டைப்பூச்சி மருந்தைக்*
*குடித்தான்... உடனே / குளிர்ந்து போனான்...*
*போனான்.*
*வைர வியாபாரி / மன்னார்சாமி –*
*வாயில் / வைரக்கற்களை நுணுக்கிப்*
*போட்டான்... உடனே/விறைத்துப் போனான்... /*
*போனான்...*

*ஓ...*
*செத்தாலும் / மேன்மக்கள் மேன்மக்களே!"*
*(ஊசிகள், பக்.34–35)*

மூட்டை தூக்கிப் பிழைக்கவும் முடியாத நிலையில் பூச்சி, மூட்டைப் பூச்சி மருந்தைக் குடித்து மரணத்தைத் தழுவுகிறான்; வைர வியாபாரி மன்னார்சாமியோ வாயில் விலை மதிப்பு மிக்க வைரக் கடுக்கனை நுணுக்கிப் போட்டு இறந்து போகிறான். சாவைத் தேர்ந்தெடுக்கும் முறையிலும் ஏழைக்கும் பணக் காரனுக்கும் இடையே காணப்பெறும் வேறுபாட்டினை, 'ஓ... செத்தாலும் மேன்மக்கள் மேன்மக்களே!' என்னும் பழந்தமிழ் இலக்கிய வரியினைக் கையாண்டு அங்கதமாகியுள்ளார் மீரா.

மீராவின் எழுதுகோல் இன்றைய பட்டிமன்றங்களின் போக்கையும் அங்கதத்திற்கு உள்ளாக்கத் தவறவில்லை. பட்டிமன்றங்கள் தொடக்க காலத்தில் அறிவுசார்ந்த விவாத மேடைகளாக விளங்கின; சங்க இலக்கியம், திருக்குறள், சிலப்பதிகாரம், கம்ப ராமாயணம், வில்லி பாரதம், பெரிய புராணம் முதலான இலக்கியங்களின் பெருமைகளைக் கடைக் கோடி மனிதர்க்கும் கொண்டு சேர்த்தன. அடுத்தடுத்த கால கட்டங்களில் சமூக அவலங்களைப் பற்றியும் குடும்ப நடைமுறைகளைக் குறித்தும் பட்டிமன்றங்கள் சிந்தித்தன. பொழுதுபோக்குக் கூறுகள் எப்போது முதன்மை பெறத் தொடங்கினவோ அப்போது பட்டிமன்றங்கள் துணுக்குத் தோரணங்கள் ஆயின; தனிப்பட்ட நகைச்சுவை, நையாண்டி, கேலி, கிண்டல், எள்ளல், ஏசல் என்ற பெயரில் கேலிக்கூத்து களாக மாறின. 'ப(ா)ட்டிமன்றம்' என்னும் கவிதையில் பட்டிமன்றத்தின் இப் போக்கினைக் கூர்மையான விமர்சன நோக்கில் சாடியுள்ளார் மீரா:

*"பாட்டி செத்த பத்தாம் வினாடி*
*பெரிய குழப்பம் –*
*பிணத்தை / எரிப்பதா புதைப்பதா என்று.*

*உள்ளூர்ப் புலவர் ஓடி வந்தார்*
*பட்டிமன்றம் வைத்துப் / பார்த்தால் என்ன என்று"*

**(ஊசிகள், ப.23)**

**சமய அங்கதம்**

சமய அங்கதத்தின் ஆட்சியும் மீராவின் 'ஊசிகள்' தொகுப்பில் உண்டு. 'கடவுள் இருக்கிறாரா? இல்லையா?' என்பது

காலங்காலமாக நாட்டில் மக்களிடையே நிகழ்ந்து வரும் ஒரு வாதம். 'கடவுளைத் தேடி' என்னும் கவிதையில் இதனை வைத்தும் அங்கதமாடியுள்ளார் மீரா.

"'இருக்கிறார் கடவுள் / இல்லை கடவுள்'
வாதம் பிறந்தது; / மோதல் வளர்ந்தது

இப்போது, / இல்லை ஒருவர் இங்கே
இருக்கிறார் ஒருவர் / தலைமறைவாக!

போத்தனூர்க் காவலர் / புலனாய்கின்றார்!"
(ஊசிகள், ப.36)

கடவுள் அவர் பாட்டிற்கு ஏதோ ஓர் இடத்தில் அமைதியாக இருக்க, 'இருக்கிறார்' என்றும், 'இல்லை' என்றும் கடவுளின் பேரால் வாதம் பிறந்து, மோதல் வளர்ந்து, சண்டையும் சச்சரவும் செய்துகொண்ட மனிதர்கள் ஆளுக்கு ஒரு மூலையில் தலைமறைவாக இருந்து வருகிறார்களாம்! போத்தனூர்க் காவலர் இது குறித்துப் புலனாய்கின்றார்களாம்!

**'அங்கதத்திற்கோர் மீரா!'**

தெ.வெற்றிச்செல்வன் குறிப்பிடுவது போல, "மீராவின் அங்கதமாடலில் சமூக அக்கறையும் அரசியல் விழிப்புணர் வூட்டலும் பிற்போக்குத்தனங்களைச் சாடும் கோபாவேசமும் ஒன்று கலக்கிற தன்மையைக் காணலாம்" (சொற்களின் ஒளிச்சேர்க்கை, ப.2). மேலும் அவரது சொற்களிலேயே சுட்ட வேண்டும் என்றால், மீராவின் கவிதைகளில் 'அங்கதம் கூர்மையான விமர்சனங்களாக — அம்பலப்படுத்தலாக — பழமைவாத பிற்போக்குத் தனங்களுக்குச் சாட்டையடியாக — அரசியல், சமூக, சமய, தனிமனித இழிவுகளைத் தோலுரிப்பதாக — புதுமை விழைவுகளோடு கவிதை சிறக்க வெளிப்படக் (Powerful expression) காரணமாக அமைகிறது எனலாம்'. 'பரணிக்கோர் செயங் கொண்டான்' என்பது போல, அங்கத உத்தியின் திறமான பயன்பாட்டினைக் கருத்தில் கொண்டு, 'அங்கதத்திற்கோர் மீரா' என அழைக்கலாம் போலத் தோன்றுகிறது!

# 6. ‘குக்கூ’ கவிஞர்

*“மீரா – கவிதைச் சுவைஞர்கள் நெஞ்சில் தேன் பிலிற்றும் ஒரு திருப்பெயர். இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை வரலாற்றில் தமக்கெனத் தனியிடம் வகிர்ந்து கொண்ட ஆளுமை...”* — *சிற்பி**

‘இராசேந்திரன் கவிதைகள்’ (1965), ‘மூன்றும் ஆறும்’ (1967), ‘கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்’ (1971), ‘ஊசிகள்’ (1974) வரிசையில் 28 ஆண்டுக் கால இடைவெளிக்குப் பின் வெளிவந்திருக்கும் மீராவின் கவிதைப் படைப்பு ‘குக்கூ’ (2002) ‘ஐம்பெருங் காப்பியங்கள்’ போல் மீரா படைத்துத் தந்திருக்கும் இந்த ஐந்து கவிதைத் தொகுதிகளையும் ஒருசேரப் பயில்வோர் தமிழ்க் கவிதையின் பல்வேறு பரிணாமங்களையும் — பரிமாணங்களையும் — உய்த் துணரலாம். கவிக்கோ அப்துல் ரகுமான் குறிப்பிடுவது போல் “மீராவின் கவிதைகளைத் தமிழ்நாட்டுக் காலவுணர்வைக் காட்டும் மானிகள் என்றே கூறலாம்” (அணிந்துரை, மீராவின் ‘குக்கூ’, ப.3)

## மீராவின் ‘குக்கூ’ கவிதைகள்

அறுபதுகளில் வெளிவந்த ஈழத்து மஹாகவியின் ‘குறும்பா’க் களில் தம் மனத்தைப் பறிகொடுத்தவர் மீரா. அத்தொகுப்பைப் பலமுறை படித்துச் சுவைத்துத் திளைத்தவர் அவர். மீராவின் கணிப்பில் ‘ஆங்கிலத்தில் உள்ள Limerick என்னும் கவிதை வடிவத்தைக் கச்சிமாகப் பயன்படுத்தித் தமிழ் மொழிக்கு அழகு சேர்த்தவர் மஹாகவி’ ஆவார். அவருடைய குறும்பாக்களை அசைபோட்டு அசைபோட்டுப் பழகிய மீராவின் படைப்பு உள்ளம் முதன்முதலில் ஒரு குறும்பாவைப் பெற்றெடுத்தது. இக் குறும்பா கருவாகி உருவான வரலாற்றை மீராவின் சொற்களிலேயே காண்பது சுவையாக இருக்கும். இதோ மீராவின் முதல் குறும்பா படைப்பு அனுபவம்:

---

* அணிந்துரை, மீராவின் ‘கோடையும் வசந்தமும்’, ப.3.

"ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு மதுரையில் அமோகமாக நடந்து கொண்டிருந்த வேளை. மூன்று நான்கு நாட்கள் என்று நினைக்கிறேன். அந்தப் பெரிய சித்திரைத் திருவிழாவின் கள்ளழகர் மாண்புமிகு எம்.ஜி.ஆர். தினமும் கூட்டம் அலை மோதியது. பல்கலைக்கழகக் கருத்தரங்கைத் தவிர, பட்டிமன்றம், கவியரங்கம், நாட்டியம், நாடகம், தெருக்கூத்து, இசை நிகழ்ச்சிகள் நடைபெற்ற இடங்களிலெல்லாம் ஏகப்பட்ட கூட்டம். அங்கங்கே கூடிய கூட்டம் பொறுமையாய் அங்கங்கே நிலைகொள்ள வில்லை. அங்கே என்ன கூட்டம், இங்கே என்ன அதிகக் கூட்டம் என்று ஒவ்வோர் இடமாகப் போய்க் கொண்டிருந்தது.

கூட்டம் தமிழுக்கு வந்ததாகத் தெரியவில்லை. வேடிக்கை பார்க்க, கூட்டத்தை வேடிக்கை பார்க்க வந்தது மாதிரி இருந்தது. இது என் மனத்தை உறுத்தியது.

அப்போது என் வாய் என்னையறியாமல் முணுமுணுத்தது.

*'கூடல் நகரில்*
*கூட்டம்*
*கூட்டம் கூட்டம்*
*கூட்டம் கூட்டம் கூட்டம்*
*கூட்டம் பார்க்க!'*

இந்தக் கவிதையில் 'கூடல் நகரில்', 'பார்க்க' என்னும் இரண்டு வார்த்தைகளைத் தவிர திரும்பத் திரும்ப ஒலிப்பது 'கூட்டம்' என்னும் வார்த்தைதான். கூட்டத்தின் அடர்த்தியைக் காட்சிப்படுத்த அப்படி எழுதினேன்" *(பக்.15—16)*.

இக் குறும்பாவைத் தொடர்ந்து இதே பாணியில் — மஹாகவியின் குறும்பா போலவோ ஆங்கில லிமரிக் போலவோ அடி, சீர் வரையறை இல்லாமல் — அவ்வப்போது சில குறுங் கவிதைகளை எழுத முற்பட்டார் மீரா. இங்ஙனம் இருபது ஆண்டுகளுக்கு மேலாகப் பல்வேறு சூழல்களில் எழுதப்பெற்று— பல்வேறு தொகுப்பு நூல்களில் இடம்பெற்ற — மீராவின் குறும்பாக்களே ஜீன் 2002—இல் 'குக்கூ' என்னும் தலைப்பில் நூலுருப் பெற்றுள்ளன.

"ஹைகூ என்னும் ஜப்பானியக் கவிதை வடிவம் தமிழகக் கவிதையுலகில் சூறைக் காற்றாய் வீசிக் கொண்டிருந்த போது

நான் 'குக்கூ' மழையில் நனைந்து கொண்டிருந்தேன். வீதியில் நடக்கும் போதும் பேருந்தில் பயணம் போகும் போதும் சில குக்கூக் கவிதைகள் மனதில் ஓடி வந்து ஒட்டிக்கொண்டன. வீட்டுக்கு வந்ததும் பழைய துண்டுக் காகிதங்களில் அவற்றை எழுதி வைத்தேன். கண்ணில் கண்ட காட்சிகளையெல்லாம் மேற்பூச்சு இல்லாமல் பதிவு செய்து வைத்தேன். சில கறபனை களுக்கும் உயிர் கொடுத்தேன்... இதில் உள்ள கவிதைகளை வாசகர்கள் ஓடுகிற ஓட்டத்தில் படித்துத் தூக்கி எறிந்து விடாமல் கொஞ்சம் நிதானமாகப் படிக்க வேண்டும்" *(பக்.16—17)* என மீராவே 'குக்கூ' தொகுப்பிற்கு எழுதிய முன்னுரையில் தம் கருத்தினைப் பதிவு செய்துள்ளார். இனி, கவிஞர் மீரா படைத்துள்ள 'குக்கூ' கவிதைகளின் நோக்கும் போக்கும் குறித்துக் காண்போம்.

**தாய்மண் பற்று**

தாய்நாட்டின் மண்ணில் — புழுதியில் — படுத்துப் புரள்வதிலே தனி இன்பம் கண்டவர் பாரதியார். அதுபோல் கவிஞர் மீராவும் தாய்மண்ணின் மீது தனிப்பற்றும் பாசமும் கொண்டவராக விளங்குகின்றார். 'கீழே விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை' எனக் கூறும் பழமொழி, மீராவின் கைவண்ணத்தில் புத்தம் புதிய 'குக்கூ'வாகப் பரிணமித்துள்ளது.

*"விழும்போதெல்லாம்*
*மீசையில் ஒட்ட வேண்டும்*
*இந்தச் செம்மண்,*
*ஏனெனில் எம்மண்."* *(ப. 32)*

'செம்மண்ணே' ஆனாலும் 'எம்மண்' என்பதிலே கவிஞருக்குத் தனிமதிப்பு, மரியாதை; உள்ளார்ந்த ஈடுபாடு.

**படிமப் பாங்கு**

பேராசிரியர் பாலா தம் மதிப்புரையில் சுட்டிக்காட்டுவது போல், மீராவின் 'குக்கூ' கவிதைகளில் 'ஜப்பானிய உடையும் இல்லை, நடையும் இல்லை, சட்டங்களும் இல்லை, படிமம் கட்டாயம் என்ற சட்டகமும் இல்லை' *(ப.10)*. ஆயினும் மீரா படைத்துள்ள 'குக்கூ' கவிதை ஒன்று இதோ:

*"இதுதான் வேலை*
*மல்லாந்து படுத்து*

*சிகரெட் புகையை*
*ஊதி ஊதித் தள்ளும்*
*எங்கள் ஊருக்கு வந்த*
*புதிய சிமெண்ட் ஆலை."* (ப.55)

ஊருக்கு வந்த புதிய சிமெண்ட் ஆலை கக்கும் புகையானது கவிஞரின் பார்வையில் ஒருவர் மல்லாந்து படுத்து சிகரெட் புகையை ஊதி ஊதித் தள்ளுவது போல் தோன்றுகின்றது. புதிய சிமெண்ட் ஆலையின் வருகையால் — அது வெளியேற்றும் புகையின் தாக்குதலால் — சுற்றுப்புறச் சூழல் மாசடைவதைச் சுட்டிக்காட்டும் கவிஞர், படிப்பவரின் மனக்கண் முன்னே ஓர் அழகிய படிமக் காட்சி உருவாகும் வகையில் கவிதையைப் படைத்திருப்பது ஒரு கூடுதல் சிறப்பாகும்.

படிமப் பாங்கு சிறப்பாக விளங்கும் பிறிதொரு 'குக்கூ' இதோ:

*"குச்சிப் பயலுக்கு*
*கந்தகத் தலைப்பாகை சின்னதாய்*
*பிடித்திழுத்தால்*
*எரிந்து விழுகிறான் என்னமாய்!"* (ப.26)

'குச்சிப் பயல் — உச்சியில் சின்னதாய் கந்தகத் தலைப்பாகை— பிடித்து இழுத்தால் சுருக்கென்று எரிந்து விழும் பாங்கு' — 'சொல் கேட்டார்க்குப் பொருள் கண்கூடாதல்' என்னும் உரையாசிரியரின் வாக்கு இங்கே 'குக்கூ' வடிவில் உண்மை ஆகியிருப்பதை உய்த்துணரலாம்.

**சிந்தனை நறுக்குகள்**

தமிழ்க் கவிதையில் காலங்காலமாகக் கையாளப்பட்டு வரும் ஓர் இன்றியமையாத கருத்தியல் நிலையாமை. யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை என மூவகையான நிலையாமைச் சிந்தனைகளைத் தமிழ் இலக்கியம் வாழையடி வாழையாக எடுத்து மொழியும். தொல்காப்பியர் கூறும் புறத்திணைகளுள் ஒன்றான காஞ்சித் திணையின் பாடுபொருள் நிலையாமை. இத் திணைக்கு உரிய துறையாகத் தொல்காப்பியர் கடைசியில் கூறுவது 'காடு வாழ்த்து' (புறத்திணையியல், நூற்பா 24). இக் கருத்தியலின் எதிரொலியை மீராவின் 'குக்கூ'விலும் காண முடிகின்றது.

*"வீடு கட்டினேன்*
*சுடுகாட்டுக் கெதிரில்,*
*எந்த நேரமும்*
*விடைபெறலாம் எளிதில்"* *(ப.39)*

என்ற 'குக்கூ' இவ்வகையில் குறிப்பிடத்தக்கது. வீடு கட்டியதில்— அதுவும் சுடுகாட்டுக்கு எதிரில் கட்டி முடித்ததில் — ஒரு தனிப்பட்ட நன்மை உண்டு. எந்த நேரமும் எளிதில் இந்த மண்ணுலகத்தில் இருந்து விடைபெற்றுச் சென்றுவிடலாம் அல்லவா? ஆழமான தத்துவச் சிந்தனையை எளிய முறையில் எல்லோருக்கும் சென்று சேரும் விதத்தில் வெளியிடுவதில் வல்லவர் மீரா என்பதை மெய்ப்பிக்கும் 'குக்கூ' கவிதை இது!

மீராவின் தத்துவச் சிந்தனையை வெளிப்படுத்தும் பிறிதொரு 'குறுகத் தறித்த குக்கூ':

*"முகமூடி போட்டேன்*
*குழந்தைக்கு வேடிக்கை காட்ட*
*முடியவில்லை அதற்குப் பின்*
*முகத்தைச் சும்மா நீட்ட."* *(ப.76)*

முதன்முதலாக முகமூடி போட்டுக் கொண்டது என்னவோ குழந்தைக்கு வேடிக்கை காட்டத்தான். ஆனால் அதுவே காலப் போக்கில் பழக்கமாகி — வழக்கமாகி — வாடிக்கையாகி— வாழ்க்கையும் ஆகிவிட்டது! அதற்குப் பின்னர் முகமூடி அணியாமல் முகத்தைச் சும்மா நீட்டுவது என்பது முடியாமலே போய் விட்டது! வேடிக்கை — விளையாட்டு — வினையாகி விட்டது என்பதா? முகம், முகவரி என்ற எல்லையைத் தாண்டி மனிதனுக்கு இன்று முகமூடி அணிந்து கொள்ளுவது என்பது காலத்தின் கட்டாயமாகிவிட்டது என்பதா? அல்லது மனிதன் தன் அகத்தை — சுயத்தை — மறைத்துக் கொள்ள முகமூடி ஒரு கவசமாகப் பயன்படுகின்றது என்பதா?

நறுக்குத் தறித்தாற் போல் மூன்றே வரிகளிலும் தம்மால் அழகிய 'குக்கூ' கவிதையைப் படைக்க முடியும் என்பதை மீரா இத்தொகுப்பில் இரண்டு இடங்களில் (பக்.60,77) காட்டியுள்ளார். ஓர் எடுத்துக்காட்டு:

"கனவு கண்டேன் நான்..
கனவில் நன்றாய்த்
தூங்கக் கண்டேன் – நான்" (ப.60)

**உடன்பாட்டுச் சிந்தனை** (Positive Thinking)

உலகை — வாழ்க்கையை — உடன்பாட்டு மனப்பான்மையில் நம்பிக்கையோடு பார்க்கும் பார்வையும் மீராவின் 'குக்கூ' கவிதைகளில் ஆங்காங்கே மூன்றாம் பிறை போலக் காட்சியளிக்கின்றது. கவிஞரின் உள்ளங்கவர் 'குக்கூ' ஒன்று இதோ:

"சூரியன் மறைந்து விட்டான்
என்று நீ
சோர்ந்து விழாதே;
சந்திரன் வரும்
நட்சத்திரங்கள் வரும்
வளைத்துப் பிடி விடாதே!" (ப. 75)

சூரியன் மறைந்து விட்டான் என்று சோர்ந்து விழுவதில்— சும்மா இருப்பதில் — பொருள் இல்லை. ஒளி வீசி நிற்கும் சந்திரன், கொத்துக் கொத்தாய்க் கண் சிமிட்டி நிற்கும் நட்சத்திரங்கள் என நம்பிக்கையோடு பார்ப்பதற்கு வானில் எத்தனையோ உள்ளன. அது போலத்தான் வாழ்க்கையிலும். எனவே எதற்காகவும் சோர்ந்து விழாமல் — விடாமல் நம்பிக்கையோடு உழைத்து முன்னேறு!' என இளைய தலைமுறைக்கு அறிவுறுத்து கிறார் மீரா. பிறிதொரு 'குக்கூ' கவிதையிலும் கவிஞர், கல்லையும் முள்ளையும் காலில் குத்தும் நெருஞ்சியினையும் பற்றிக் கவலைப்படாமல் கடந்து — மேலே மேலே விடாமுயற்சியுடன் நடந்து போனால் — அங்கே கண்ணைக் கவரும் குறிஞ்சி காத்திருக்கிறது என்று பயில்வார் நெஞ்சில் நம்பிக்கை ஒளியைப் பாய்ச்சுகின்றார்:

"கல் தான் முள்தான்
காலில் குத்தும் நெருஞ்சி.
கடந்து போ
மேலே மேலே
நடந்து போ...
கண்ணைக் கவரும் குறிஞ்சி" (ப.35)

**இயல்பான படப்பிடிப்பு**

'இருவேறு உலகத்து இயற்கை' (374) என்று வள்ளுவர் அன்று சொன்னது சமுதாயத்தில் இன்றும் தொடர்கதையாய் இருந்து கொண்டுதான் வருகின்றது. கவிஞர் மீராவும் தம் 'குக்கூ' கவிதைகளில் ஆங்காங்கே இன்றைய சமுதாயத்தின் அடிமட்டத்தில் வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழ்ந்து வரும் ஏழை எளிய மக்களின் அவல நிலையைப் படம்பிடித்துக் காட்டியுள்ளார். ஆடி வீதியில் கடை பரப்பிக் காலையும் பரப்பி குவியல் குவியலாய் அழுகல் மாம்பழம் விற்று வரும் ஒரு கிழவி (ப.24), மார்கழி மாத விடியலில் குளித்து முடித்துக் குங்குமப் பொட்டிட்டு மலம் அள்ள வரும் தோட்டியின் மகள் (ப.25), குமரன் தன் அப்பாவின் பிணத்திற்குத் தீ மூட்டிவிட்டுக் கும்பிட்டுப் போக, எரியும் பிணத்தில் மல்லிசேரி பீடியை எடுத்துப் பற்ற வைக்கும் மயானத் தோட்டி (ப.32), யாரிடம் விற்பது எனக் கவலையோடு வீதியில் திரியும் பூக்காரி (ப.38), நகரப் பேருந்தில் காலையில் கறிவேப்பிலை மணங்கமழப் பயணிக்கும் காய்க்கறிகாரக் கண்ணம்மா (ப.41) முதலானோர் மீராவின் 'குக்கூ', கவிதைகளில் எந்த விதப் பாசாங்கும் பூச்சும் இன்றி இயல்பாய் வலம் வருகின்றனர். இவர்களின் வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டும்போது கவிஞருக்குப் பெரிதும் கைகொடுப்பது முரண் எனும் உத்தி ஆகும். இவ்வுத்தி சிறப்பாக அமைந்த ஒரு 'குக்கூ' வருமாறு:

*"வருக வருக வாசகம்*
*வாசலில்...*
*கொல்லையில்*
*எச்சில் இலைக்கு*
*இந்நாட்டு மன்னர் யாசகம்."* (ப.34)

வாசலுக்கும் கொல்லைப்புறத்திற்கும் இடையேதான் எத்தனை பெரிய இடைவெளி! இடைவெளி இடத்தால் மட்டும்தானா? 'எச்சில் இலை'க்கு 'இந்நாட்டு மன்னர்' யாசகம்— நல்ல முரண், கூர்மையான அங்கதம்!

**மெல்லிய புனைவுகள்**

'மலரினும் மெல்லிது காமம் சிலர் அதன், செவ்வி தலைப்படு வார்' (1289) என்பது வள்ளுவர் வாக்கு. காதலின் மென்மையும்

மேன்மையும் விளங்க மீரா படைத்திருக்கும் இரு ‘குக்கூ’ கவிதைகள் இங்கே குறிப்பிடத்தக்கவை. காதலனின் பார்வையில் இரண்டே இரண்டு இனியவை. எவை அவை என்கிறீர்களா? மறுமொழி இதோ:

“ஒன்று உன்
இருவிழிப் பார்வை
ஈர்க்கும் காந்தம்,
இன்னொன்று ஏகாந்தம்.” (ப.30)

‘காந்தம் — ஏகாந்தம்’ — சுவையான சொல்லாடல்!

மார்கழித் திங்கள். புலர்காலைப் பொழுது. வாசலில் கோலம் போடும் ஒரு பருவப் பெண். இச்சூழலில் இளைஞன் ஒருவன் தொடுக்கும் சுவையான கேள்விக் கணை இது.

“மார்கழி பிறந்தது...
காலையில் வாசலில்
நீ போடுவதென்ன கோலமா?
இல்லை இந்த
ஏழை மனத்தை ஏலமா?” (ப.64)

‘நீ போடுவதென்ன கோலமா? இல்லை ஏழை மனத்தை ஏலமா?’ — ‘சபாஷ், சரியான கேள்வி’ என்று கேட்கத் தோன்று கிறதல்லவா?

நிறைவாக, பேராசிரியர் பாலா குறிப்பிடுவது போல், “நகை நடைகள், சிந்தனை நறுக்குகள், மனப்பதிவுகள், விமர்சனச் சாட்டைகள், மெல்லிய புனைவுகள், விரித்து வைத்த மனித நேய ஆலாபனைகள் — என்று மீராவின் முகவரிகள் குக்கூக்களில் சங்கதிகளாய் — ஆவர்த்தனங்களாய் — ‘கலக்குகின்றன’” (ப.10) எனலாம்.

# 7. கட்டுரை வண்ணமும் வனப்பும்

*"புதுத்தமிழின் இலக்கிய வரலாற்றில் – மீராவின்
பாட்டுக்கு ஒரு தனியிடம் உள்ளது போல்,
மீராவின் வசனத்துக்கும் ஒரு தனியிடம் உண்டு.
தமிழ் உரைநடைக்குக் கூட இத்துணை ரீதம்* (Rhythm)
*உண்டா என வியக்க வைக்கும் நடை அவருடையது."*
– இக்பால்*

கவிதைகள் போலவே மீராவின் கட்டுரைகளும் சிறப்பு வாய்ந்தன. வேறு சொற்களில் குறிப்பிடுவது என்றால், கவிதை, கட்டுரை என்னும் இரு வடிவங்களிலும் இலக்கியம் படைக்கும் வித்தகம் கைவரப் பெற்றவர் மீரா. பேராசிரியர் பாலா குறிப்பிடுவது போல், "ஒவ்வொரு கட்டுரையிலும் மீராவின் முத்திரை தரப் பதிவாக இருக்கும். வார்த்தைகளில் ஒரு கவிதை விளையாட்டு — ஒரு செல்லக் கிண்டல், அப்புறம் ஒரு தத்துவ விமர்சனம், படைப்பாளியின் கரிசனம் எல்லாம் அந்தக் கட்டுரைகளில் துலங்கக் காணலாம்" (அணிந்துரை, மீரா கட்டுரைகள், ப.4.)

மீரா வெளியிட்டுள்ள கட்டுரை நூல்கள் மூன்று. அவை:

1. 'எதிர்காலத் தமிழ்க் கவிதை' (1985): புதுக்கவிதை பற்றிய ஐந்து கட்டுரைகளின் தொகுப்பு.

2. 'வா இந்தப் பக்கம்' (1986): 'ஜூனியர் விகடன்' இதழில் 02.11.1983 முதல் 01.01.1984 வரை மீரா எழுதி வந்த பத்துக் கட்டுரைகளின் தொகுப்பு.

3. 'மீரா கட்டுரைகள்' (2003): பல்வேறு இதழ்களில் வெளிவந்த — கருத்தரங்குகளில் வாசித்த — மலர்களில் இடம்பெற்ற — 15 கட்டுரைகளின் தொகுப்பு.

---

* அணிந்துரை, மீராவின் 'வா இந்தப் பக்கம்', ப.5.

இனி, இந்நூல்களில் வெளிப்பட்டுள்ள கட்டுரை இலக்கியத்தின் வண்ணமும் வனப்பும் குறித்துக் காணலாம்.

### ஆழங்காற்பட்ட புலமை

பழந்தமிழ் இலக்கியம் முதல் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தின் திரைப்பாடல் வரை படித்துச் சுவைத்த உள்ளம் மீராவின் உள்ளம். ஆதலால் அந்த இலக்கியங்களின் காட்சி களையும் கவிதை வனப்புகளையும் அவர் தம் கட்டுரைகளில் நளினமாக, நயமாக வெளிப்படுத்தியுள்ளார். அவரது எழுதுகோல் 'பழந்தமிழ் இலக்கியம்: வேர்களைத் தேடுவோம்' என்னும் தலைப்பிலும் கட்டுரை படைத்துள்ளது; 'தமிழ் இதழ்களில் ஹைகூ' என்னும் பொருளிலும் கட்டுரை வடித்துள்ளது. முன்னைப் பழமையோ, பின்னைப் புதுமையோ எப்பொருளைக் குறித்து எழுதினாலும் அதில் தம் ஆழங்காற் பட்ட புலமை வெளிப்படும் வண்ணம் எழுதியது மீராவின் தனிச்சிறப்பு ஆகும்.

'பாரதியின் காதல் கவிதைகள்' மீராவின் பழுத்த புலமையையும் ஆழ்ந்த தோய்வையும் காட்டும் ஓர் அரிய கட்டுரை. 'காதலாகிக் கசிந்துருகி', 'பிள்ளைக் காதல்', 'குயில் பாட்டு', 'கண்ணன் பாட்டும் காதல் பாட்டே', 'தோத்திரப் பாடல்களில் காதல் ஆராதனை', 'பல்வகைப் பாடல்களில் காதல்', 'ஒப்பியல் ஆய்வில் பாரதியின் காதல் கவிதைகள்' ஆகிய ஏழு உட்தலைப்புக்களில் அமைந்திருக்கும் அக் கட்டுரை, பாரதியை மீரா எந்த அளவுக்கு எழுத்தெண்ணிப் படித்திருக் கிறார், ஆழ்ந்திருக்கும் கவியுளம் காணும் முயற்சியில் ஈடுபட்டு இருக்கிறார் என்பதைக் காட்டுவது. மேலும், வி.சுப்பிரமணியன், பிரேமா நந்தகுமார், தெ.பொ.மீ., வி.சச்சிதானந்தம், சோமசுந்தர பாரதியார், வ.ரா., கு.ப.ரா., சிட்டி, எச்.ஆர்.கிருஷ்ணன், பி.ஸ்ரீ., வ.வே.சு.ஐயர், கி.வா.ஜகந்நாதன், ஜி.ஜான் சாமுவேல், சிற்பி, சாமுவேல் தாசன், பாலச்சந்திரன் (பாலா), சுத்தானந்த பாரதியார் ஆகிய அறிஞர்களின் மேற்கோள்களை மீரா இக்கட்டுரையில் தம் கருத்துக்களுக்கு அரணாகவும் அணியாகவும் காட்டிச் சென்றிருப்பது அவரது பரந்துபட்ட புலமையைப் பறைசாற்று வதாகும். 21 பக்க அளவில் (மீரா கட்டுரைகள், பக்.53—73) அமைந்த அக் கட்டுரையில் கால வரிசைப்படி (Chronology) பாரதியின் காதல் கவிதைகளில் இருந்து கருத்துக்களை நிரந்தினிது கூறிச் செல்லும் மீரா, 'பாரதியை உலக மகாகவியாகக் காட்ட அவரது காதல் கவிதைகள் கூடப் போதுமே' (ப.73) என்னும் வரியுடன் கட்டுரையை நிறைவு செய்திருப்பது சிறப்பு.

"ஏலம் கூறுகின்றவன் மூன்று முறை கூறிவிட்டான் என்றால் ஏலம் கூறப்பட்ட பொருள் அந்த 'விலைக்கு' உறுதியாகிவிட்டது என்று பொருள். அது போல அல்லவா பாரதியும் மும்முறை (காதல், காதல், காதல்) முழங்குகிறான். ஆம்! காதல் உறுதி எனில் அதை அடையாவிட்டால் சாதலும் உறுதி (காதல் போயின், சாதல், சாதல், சாதல்) என்பதைப் பறைசாற்றுவதைப் போலப் பகர்கிறான்" (ப.53) என மகாகவி பாரதியின் காதல் பற்றிய கவிதை வரிகளில் காணலாகும் நயத்தினை எடுத்துரைக்கும் போதும்,

"காதலில் தான் எத்தனை வகை? பாரதியின் கண்ணோட்டத்தில் பார்ப்போமானால், பிள்ளைக் காதல், மறைந்த பின் காதல், பறவைக் காதல், விலங்குக் காதல், மனிதக் காதல், தெய்வத்தின் பேரில் காதல், ஒருதலைக் காதல், கனவுக் காதல் என்று பலவிதம்!" (ப.54) எனப் பாரதியின் கருத்தியலில் அமைந்த பல்வகைக் காதலைச் சுட்டிக்காட்டும் போதும்,

"பத்து வயதிலிருக்கும் போது ஒன்பது வயதுக் கன்னி ஒருத்தியிடம் தனக்குக் காதல் ஏற்பட்டு விட்டதாக, பன்னிரண்டு வயதில் தனக்குத் திருமணமான போது பாரதி, யாரிடமாவது வெளியிட்டிருக்க முடியுமா?" (ப.57) எனப் பாரதியின் பிள்ளைக் காதல் குறித்துப் பொருள் பொதிந்த வினா ஒன்றினை எழுப்பும் போதும்,

"குயில் பாட்டு, ஸ்வசரிதையைப் போல அல்லாமல் முற்றிலும் ஓர் கனவாகும். ஆனால் தத்துவக் கனவாகும். ஆக, அது கனவிலும் கற்பனையிலும் திளைக்கிற ஒரு காதற் காவியமாகும்" (ப.63) எனக் 'குயில் பாட்டு' பற்றிய தம் மதிப்பீட்டினைத் தரும் போதும்,

"வழி வழி வந்த மரபின் தாக்கம் பாரதியின் பாவில் பல இடங்களில் பரிணமிக்கக் காணலாம்" (ப.67) எனக் 'கண்ணன் பாட்டு' குறித்து ஆய்வு நோக்கில் கருத்துரைக்கும் போதும்,

"பெண் தெய்வங்களுக்குத் தன்னையே காதலனாக்கி பாரதி பாடுவது துணிச்சலான பெரிய புரட்சி" (ப.71) என்ற தமிழறிஞர் கி.வா.ஜகந்நாதனின் கருத்தினை உரிய இடத்தில் மேற்கோள் காட்டும் போதும்,

"பாரதி தமிழ்நாட்டில் பிறந்தவர் என்பதால் தாழ்ந்து போய்விடவில்லை. அவர் கவிதைகளை உலக இலக்கிய அரங்கிற்கு எடுத்துச் செல்வோம்" (ப.74) என எதிர்காலத்தில்

மேற்கொள்ள வேண்டிய பணியினைப் பாரதி ஆர்வலர்களுக்கும் ஆய்வாளர்களுக்கும் அறிவுறுத்தும் போதும் மீராவின் ஆழங்காற்பட்ட புலமையின் வீச்சு சுடர் விட்டு நிற்கக் காண்கிறோம்.

'சிலப்பதிகாரம் ஒரு தொடர்நிலைச் செய்யுள் மட்டுமல்ல: சங்க இலக்கிய மரபைத் தொடர்ந்து நிலைநிறுத்தும் செய்யுளுங் கூட' என்பதை ஒரு கட்டுரையில் நிறுவியுள்ள மீரா, பிறிதொரு கட்டுரையில் சின்னப்ப பாரதியின் நாவல்களில் இடம் பெற்றுள்ள உவமை நயம் குறித்தும் அலசி ஆராய்ந்துள்ளார்; 'சிற்பியின் கவிதைகளில் பெண்ணியமும் தலித்தியமும்' என்னும் தலைப்பிலும் கட்டுரை படைத்துள்ளார். மேலும் அவர், 'தமிழ் இலக்கியம்: சில முற்போக்குச் சிந்தனைகள் — சில குறிப்புகள்' எனத் தம் கருத்தியல் நிலைப்பாடு துலங்கும் வண்ணம் ஒரு கட்டுரை வரைந்துள்ளார்.

## திறனாய்வுப் பார்வை

ஜெயகாந்தனைப் பற்றி மீரா 'ஜெயகாந்தனின் ஒரு குறுநாவல்', 'தமிழ் இலக்கியத்தில் ஜெயகாந்தன்' என்னும் இரு கட்டுரைகளை எழுதியுள்ளார். முன்னது ஜெயகாந்தனின் 'இதய ராணிகளும் இஸ்பேடு ராஜாக்களும்' என்னும் நூலில் இரண்டாவதாக இடம்பெற்றுள்ள 'ஒரு குடும்பத்தில் நடக்கிறது' என்னும் குறுநாவலைப் பற்றியது; ஜெயகாந்தன் மணிவிழா மலரில் இடம்பெற்றிருப்பது. பின்னது ஜெயகாந்தன் மணிவிழாவில் *(29.04.1994)* மீரா பேசிய சில குறிப்புக்களின் அடிப்படையில் உருவாக்கப் பெற்றது. இவ்விரு கட்டுரைகளிலும் மீரா நாம் இதுவரை நோக்காத புதிய கோணத்தில் ஜெயகாந்தனைத் துல்லியமாகவும் நுட்பமாகவும் வெளிப்படுத்தியுள்ளார். "விசாலமான சிந்தனைகளை, வித்தியாசமான சிந்தனைகளை தம் பாத்திரங்களின் மூலம் பேச வைத்து, தமிழ் இலக்கியத்தை, மனித குலச் சிந்தனை வளத்தின் கருவூலமாக ஆக்கும் பணியைச் செய்த மாபெரும் சிந்தனையாளர் — எழுத்தாளர் (Greatest Thinker turned Writer) என்று ஜெயகாந்தனை, தமிழ் இலக்கியத்தின் பரப்பில் நான், காண்கிறேன்" (மீரா கட்டுரைகள், ப.108) என்னும் ஜெயகாந்தனைப் பற்றிய மீராவின் புரிதல் — மதிப்பீடு — ஆய்வுலகம் ஊன்றி நோக்கத் தக்கதாகும்.

'ஆழ்ந்து அகன்று நுண்ணியனே!' என்னும் திருவாசகத் தொடர் மீராவின் திறனாய்வுத் திறத்திற்கும் பொருந்தி வருவதாகும். ஆழ்ந்து, அகன்று, நுண்ணிதின் அமைந்த அவரது திறனாய்வுப் பார்வைக்கு நல்லதோர் எடுத்துக்காட்டு 'தமிழ்

இலக்கியத்தில் ஜெயகாந்தன்' என்னும் அவரது கட்டுரை ஆகும். அதில் இருந்து ஒரு நுட்பமான பகுதி வருமாறு:

"அந்தக் கதையின் நாயகிக்கு 'கங்கா' என்று பெயர் வைத்ததிலேயே ஒரு குறியீடாகத் (Symbolic) தன் நோக்கத்தை உணர்த்தி விடுகிறார். இந்தியப் பெண் குலத்தின் குறியீடாக கங்கையைக் காண்கிறார். கங்கை இமயத்தில் தன் பயணத்தைத் தொடங்கும்போது, அதன் நீர் ஸ்படிகமாக, பனிக்கட்டிகளாக, கண்ணாடிப் பாளம் பாளமாகத் தான் புறப்பட்டு வருகிறது. இடையில் போகப் போக சுற்றுப்புறச் சூழல் கேடுகளால் எத்தனையோ அழுக்குகள் வந்து கலக்கின்றன. இருப்பினும், அதை உயர்வாய், உன்னதமாய் ஏன் புனிதமாய்க் கருதுகிறவர்கள், கங்கை அழுக்கடைந்து விட்டது என்று ஒதுங்குவதுமில்லை, ஒதுக்குவதுமில்லை. அதுபோல சூழல் கேடுகளால் பெண் கெடலாம்; கெடுக்கப்படலாம். ஆனால் பெண் தான் மனதறிந்து கெட்டாலன்றி, அந்தப் பெண் புனிதமானவளே, பவித்திர மானவளே. கங்கை மாசுபட்டு விட்டது என்று அதைக் குளிப்பாட்ட முடியுமா? மங்கையும் கங்கையும் ஒன்றுதான்... என்று காட்டவே கற்பு நெறி ஒரு பிரச்சினையாக, கேள்விக் குறியாக ஆக்கப்படுகிற, தன் கதையின் நாயகிக்கு மிக சமத்காரமாக, அதே சமயம் பொருத்தமாக, ஒரு தத்துவ தரிசனம் தரும் முறையில் 'கங்கா என்று பெயர் சூட்டி இருக்கிறார்" *(பக்.106—107).*

இங்ஙனம் பாத்திரப் பெயர்களுக்கு மட்டுமன்றி, கதைத் தலைப்புகளுக்கும் மீரா தம் கட்டுரைகளில் தந்திருக்கும் விளக்கம் அவரது திறனாய்வுப் பார்வையின் திட்பத்தையும் நுட்பத்தையும் பறைசாற்றி நிற்கின்றது.

'இந்த வாழ்க்கையை நான் ஏன் தாங்கிக் கொள்ளக் கூடாது?' என்று அகிலா நாவலின் முடிவில் தன் அண்ணனிடம் கேட்கும்போது கம்பன் சீதையிடம் கண்ட 'இரும்பொறை' அவளிடம் அப்படியே இருப்பதைக் காணமுடிகிறது. இளங்கோவின் பத்தினித் தெய்வமாகவே அகிலா மாறுவதை— உணர்வதை — ஜெயகாந்தன் புத்தார்வத்துடன் வருணிக்கிறார். 'போற்றா ஒழுக்கம் புரிந்தீர்' என்ற கண்ணகியின் வார்த்தையில் உள்ள கடுமை கூட 'சொல்லுங்கள் — நான் செத்துப் போய்விடவில்லை' என்ற அகிலாவின் கூற்றில் இல்லை. அப்படி ஒரு மென்மை! அப்படி ஒரு மேன்மை! இன்னா செய்தார்க்கும்

இனியவே செய்யும் — நன்னயஞ் செய்யும் வள்ளுவப் பண்பாடு; நயத்தக்க நாகரிகம்” (மீரா கட்டுரைகள், ப.97) எனக் கம்ப ராமாயணம், சிலப்பதிகாரம், திருக்குறள் ஆகிய முன்னைப் பழைய இலக்கியங்களின் ஒளியில் ஜெயகாந்தனின் பின்னைப் புதிய படைப்பில் வரும் ஒரு பாத்திரத்தை அலசி ஆராய்ந் திருப்பது ஜெயகாந்தனின் நுண்ணிய திறனாய்வுப் பார்வைக்குக் கட்டளைக் கல் ஆகும்.

“ஓ.... ஜெயகாந்தன் என்ன செய்துவிட்டார்...” (மீரா கட்டுரைகள், ப.104) எனத் தம் கட்டுரையினை மீரா முடித்திருக்கும் பாங்கு, அவர் ஜெயகாந்தனை எந்த அளவுக்கு ஊன்றிப் படித்திருக்கிறார் என்பதைப் புலப்படுத்துவதாகும்.

‘எதிர்காலத் தமிழ்க் கவிதை’ குறித்து மீரா எழுதியுள்ள ஐந்து கட்டுரைகளும் அவரது ஆழ்ந்து, அகன்று, நுண்ணிய திறனாய்வுத் திறனுக்குக் கட்டியம் கூறி நிற்பன ஆகும். இக் கட்டுரைகளின் வாயிலாக மீரா புதுக்கவிஞர்களுக்கு வலியுறுத்தி இருக்கும் ஓர் அடிப்படையான செய்தி வருமாறு: “கவிஞர்கள் மரபில் கால் ஊன்றி நின்று, புதுமைக் கனியை எட்டிப் பறிக்க வேண்டும்” (எதிர்காலத் தமிழ்க் கவிதை, ப.31).

## நயம்பட உரைத்தல்

‘நயம்பட உரை’ என்னும் முன்னோர் வாக்கினைத் தம் கவிதை, கட்டுரை, கடிதம், அணிந்துரை என அனைத்து வடிவங்களிலும் பொன்னே போல் போற்றி வந்தவர் மீரா. நயம்பட உரைக்கும் அவரது நோக்கிற்கும் போக்கிற்கும் ‘தமிழ் இதழ்களில் ஹைகூ’ என்னும் கட்டுரை நல்லதோர் எடுத்துக் காட்டு ஆகும். “நமது இலக்கிய வகைகளில் சிறுகதையையும் நாவலையும் மேலைத் திசையிலிருந்து பெற்றோம். நாம் கீழ்த்திசையிலிருந்து எதையும் பெறவில்லை. ஹைகூதான் முதன் முதலாக ஒரு கீழை நாட்டிலிருந்து பெறும் இலக்கிய வகை யாகும்” (மீரா கட்டுரைகள், ப.117) என அக்கட்டுரையின் தொடக்கத்தில் ‘இலக்கிய வகைமை’ (Genre) நோக்கில் ஹைகூவின் தனித்தன்மையைச் சுட்டிக்காட்டும் மீரா, “ஹைகூ இன்று அதன் எல்லைகளைக் கடந்து சிறகடித்துப் பறப்பதற்குக் காரணமே, சிட்டுக்குருவி போன்ற அதன் சின்ன உருவமே. சின்ன உருவம் என்பதற்காக யாரும் சிறுத்து மதிப்பிட்டு விடக்கூடாது. ஜப்பானியர் உருவில் குள்ளமானவர்கள் தான், அவர்களின் ஹைகூ போல. படகோனியர்கள் உலகிலேயே உயரமானவர்கள்.

ஆனால் படகோனியர்களை யாருக்குத் தெரிந்திருக்கிறது? அதே சமயம் அமெரிக்காவிற்கே சவால் விடும் நிலையில் உள்ள ஜப்பானியரைத் தெரியாதவர் யார்? ஆக, 'ஆளும் வளரணும் அறிவும் வளரணும்; அதுதான் வளர்த்தி.'" (ப.118) எனத் தொடர்ந்து அவர் ஹைகூ கவிதை இன்று உலக அரங்கில் பெற்றிருக்கும் பரவலான வரவேற்புக்கான காரணங்களை நிரந்தினிது கூறிச் செல்வது — குறிப்பாக, ஹைகூ கவிதையின் அறிவார்ந்த செறிவு மிக்க சொற்கள் அதன் கட்டுக் கோப்புக்கு வலிமை சேர்ப்பதை எடுத்துக்காட்டுவது — குறிப்பிடத் தக்கது.

கட்டுரையின் இடையே ஒப்பியல் நோக்கில் 'சொற்களின் கஞ்சத்தனமே ஹைகூவில் நெஞ்சை அள்ளும் திறம்' பெறுவதை— 'மிகவும் நுணுக்கமான திறத்துடன் சொற்களைச் செட்டாகக் கையாண்டு செப்படி வித்தை' காட்டுவதை மீரா, பாஷோ என்னும் ஜப்பானியக் கவிஞரின் ஹைகூ ஒன்றினைக் கொண்டு உணர்த்தி இருக்கும் இடம் அவரது ரசனை உள்ளத்திற்குக் கட்டியம் கூறுவது. அவரது சொற்களிலேயே அப்பகுதி வருமாறு:

"ஜப்பானியர்கள் ரசனை உள்ளம் கொண்டவர்கள். எதையும் வீணடிக்க மாட்டார்கள்... அரிசி கொட்டி வைக்கிற பாத்திரம் நம் வீட்டில் எல்லாம் இருக்கும். அரிசி இல்லை என்றால், அரிசி இல்லையே என்று கவலைப்படுவான் நம்மவன். ஆனால் ஜப்பானியர் எப்படி அந்த நிலைமையை எதிர்கொள்வர்?

இதோ பாஷோக் கவிஞர் ஹைகூ மூலம் காட்டுகிறார்.

***இந்த வண்ணக் கிண்ணத்தில்***
***மலர்களை வைப்போம்***
***அரிசிதான் இல்லையே!***

பொன் வைக்கிற இடத்தில் பூ வைப்பது என்பது நம்மவர் வழக்கு. ஆனால் அரிசி வைக்கிற கிண்ணத்தில் மலர்களை வைப்பது என்பது ஜப்பானியர் ரசனை உள்ளம். அரிசிதான் இல்லைபே என்பதில் ஏக்கம் தொனிக்கிறது. ஆனால் அதற்காகச் சோர்ந்து விடவில்லை. அதனால் தான் அது, அரிசிக் கிண்ணம் என்பது முடிவில் சொல்லப்படுகிறது. வறுமையில் செம்மை என்பார்கள். வறுமையிலும் ரசனை வரண்டு விடுவதில்லை" (பக்.123—124).

"ஹைகூவைப் புரிந்து கொள்ள வாசகன் பலமுறை மீண்டும் மீண்டும் படிக்க வேண்டும். ஒவ்வொரு முறையும் ஒரு புதிய

தோற்றம் — ஒரு புதிய செய்தி — கிடைக்கும். அதற்கு வாசகன் கவிதையோடு கலக்க வேண்டும், இலயிக்க வேண்டும்" *(ப.120)* என எழுதியதோடு நின்றுவிடாமல், கவிதையோ கட்டுரையோ எதைப் படைத்தாலும் மீரா அதனோடு இரண்டறக் கலந்து, மனம் இலயித்துப் படைத்தார். இதுவே அவரது படைப்பாக்க நெறியின் தனித்துவம் ஆகும்.

**நகைச்சுவையும் எளிமையும் கலந்த நடை**

மீராவின் கட்டுரைகளில் — குறிப்பாக, 'ஜூனியர் விகடன்' பத்திரிகையில் எழுதிய கட்டுரைகளில் — அவருக்கே உரிய நகைச்சுவையும் எளிமையும் கலந்த நடை துலங்கக் காண்கிறோம். 'வா இந்தப் பக்கம்' என்னும் தலைப்பில் 'ஜூனியர் விகடன்' *02.11.1983* நாளிட்ட இதழில் அவர் எழுதிய கட்டுரை இவ் வகையில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

"மு.வ. 'நாவற்' பழங்களில் மனம் வண்டாய்க் குடையும் பள்ளிப் பருவம்" *(வா இந்தப் பக்கம், ப.18)* என்னும் கட்டுரையின் தொடக்க வரியே அற்புதமானது; பேராசிரியர் மு.வ.வின் நாவல்களுக்கு அன்றைய கால கட்டத்தில் இளைய தலைமுறை யினர் இடையே இருந்த ஈர்ப்பினை இலக்கிய நயத்துடன் புலப்படுத்துவது.

'வா, இந்தப் பக்கம்...!' என அழைக்கும் செப்பிடு வித்தைக்காரரின் குரல் இன்று தேசத்தின் எல்லாத் திசைகளிலும் கேட்கின்றதாம். ஒரு பக்கம் சினிமா 'வா இந்தப் பக்கம்' என்கிறது... ஒரு பக்கம் சாராயம் 'வா இந்தப் பக்கம்' என்கிறது... ஒரு பக்கம் லாட்டரி 'வா இந்தப் பக்கம்' என்கிறது.

இக் கட்டுரையில் மீரா பாரத மணித்திரு நாட்டில் பஞ்சமா பாதகங்களே பஞ்ச சீலங்கள் ஆகிப்போன அவலத்தைத் தமக்கே உரிய பாணியில் — நடையில் — படம்பிடித்துக் காட்டுகிறார்: "ஊருக்கு வெளியே நிற்கும் கைகாட்டி மரங்கள் வழிப்போக்கர் களுக்கும் வாகனாதிகளுக்கும் பாதை காட்டுகின்றன. புதிதாய் ஊருக்குள்ளே பல சந்து முனைகளில் அம்புக் குறியோடு கைகாட்டி மரங்கள் முளைத்துள்ளன; 'வா இந்தப் பக்கம்... இதுதான் சாராயக் கடைக்கு வழி' என்று அன்போடு அழைக்கின்றன. இந்தத் 'தண்ணீர் தண்ணீர்' விசிறிகளுக்கு வீட்டுக்குப் போகும் வழியைக் காட்ட எந்தக் கம்பமும் இல்லை; கை காட்டியும் இல்லை" *(ப.21)*. இப்பகுதியின் கடைசி வரியை

மீண்டும் ஒருமுறை ஆழ்ந்து படித்தால், இவ்வரி வெறும் சாராயச் சீரழிவை மட்டும் குறிக்காமல், ஒரு முழுப் பண்பாட்டுச் சீரழிவையே குறியீட்டுப் பாங்கில் உணர்த்துவது புலனாகும்; 'தண்ணீர் தண்ணீர் விசிறிகள்' என்னும் தொடர் திரைப்பட மோகத்தில் ஆழ்ந்து கிடக்கும் தமிழினத்தைச் சுட்டுவது விளங்கும்; 'வழியைக் காட்ட எந்தக் கம்பமும் இல்லை; கைகாட்டியும் இல்லை' என்னும் வரி, 'எந்த அரசியல் கட்சியும் தலைவரும் மக்களுக்கு வழிகாட்டுவதாக இல்லை' என்னும் கசப்பான உண்மையை தொனிப் பொருளாக உணர்த்தும்.

" 'எல்லோரும் இந்நாட்டு மன்னர்' என்று பாரதி பாடினார்.. மகாபாரதத்தில் ஒரு மன்னன் சூதாடினான் என்றால் நம் நவ பாரதத்தில் ஒவ்வொரு மன்னனும் சூதாடும் ஒரு புதுயுகம்— கிருத யுகம் — கிளர்ந்தெழுந்து விட்டது. அன்று தருமனோடு சகுனி சூதாடினான் என்றால், இன்று மக்களோடு சகல மாநில அரசுகளும் போட்டி போட்டுக் கொண்டு சூதாடுகின்றன" (ப.22): படிக்கும் போது ஒரே நேரத்தில் இதழோரத்தில் புன்முறுவலையும் விழியோரத்தில் கண்ணீரையும் வரவழைக்கும் எழுத்து! "கேட்கும் போது சிரிப்பு வர வேண்டும்; சிந்தித்துப் பார்த்தால் அழுகை வர வேண்டும்; அதுதான் நல்ல நகைச்சுவை" (செப்பு மொழிகள், ப.35) என்னும் கண்ணதாசனின் நகைச்சுவை பற்றிய வரைவிலக் கணத்திற்கு இலக்கியமாய் ஒளிரும் பகுதி!

"எனக்கொரு யோசனை- கடைவீதிகளில், கல்லூரி, பள்ளிக்கூடப் பகுதிகளில் கள்ளுக்கடை, சாராயக் கடை நடத்த இடம் கொடுக்காமல் சுடுகாட்டுக்குப் பக்கத்தில் இடம் கொடுக்கலாம்.

அங்கே வரும் குடிமக்களை 'வா, இந்தப் பக்கம்' என்று சுடுகாடு பந்தத்தோடும் பாசத்தோடும் எளிதாய் அழைக்க முடியுமல்லவா?" (ப.21): மீராவின் கட்டுரை வண்ணத்தில் அங்கதச் சுவை களிநடம் புரிந்து நிற்கும் ஓர் உயிர்ப்பான இடம் இது!

"மீராவின் உரைநடையில் இடையில் ஒரு பக்கத்தை மட்டும் கிழித்து வந்து காட்டினாலும் அவர் எழுத்துத்தான் என்று அடையாளம் கண்டுவிடலாம்" (அணிந்துரை, மீராவின் 'வா இந்தப் பக்கம்', ப.11) என்னும் இக்பாலின் மதிப்பீடு மிகையன்று; உண்மையே.

இங்ஙனம் பல்வகை வண்ணங்களையும் வனப்புக்களையும் தன்னகத்தே கொண்ட கலைப் பெட்டகமாகவும் கருத்துப்

பேழையாகவும் தகவல் களஞ்சியமாகவும் மீராவின் கட்டுரைகள் விளங்குகின்றன.

## முத்திரை வாசகங்களும் அரிய தரவுகளும்

மீராவின் கட்டுரைகளில் ஒருமுறை படித்தாலே படிப்பவர் மனத்தில் பசுமரத்து ஆணி போல் பதிந்து விடும் முத்திரை வாசகங்கள் இருக்கும்; குத்தலும் கேலியும் கிண்டலும் மண்டிக் கிடக்கும்; அரிய தரவுகளும் பயனுள்ள தகவல்களும் இடம் பெற்று வியப்பூட்டும்; சிந்தனை மின்னல்களும் வித்தியாசமான உவமைகளும் ஆங்காங்கே சுடர்விட்டு நிற்கும்.

"நம் தாய்மொழியைக் கொலை செய்தாலும் வருந்த மாட்டோம். ஆங்கிலத்தைப் பிழையாக உச்சரித்து விட்டால் நகைப்போம்" *(மீரா கட்டுரைகள், ப.15)*: 'பயிற்சிமொழி பைந்தமிழே!' என்னும் கட்டுரையில் இடம்பெற்றிருக்கும் முத்திரை வாசகம் இது!

"வெள்ளைத் தாமரையில் வெகு காலமாய் வீற்றிருக்கும் கலைமகளே...! உனக்கொரு விண்ணப்பம்... எதை எதையோ கலை என்று அறுபத்து நான்கு கலைகளை ஏற்றுக் கொண்டிருக்கிறாய்... எல்லோருக்கும் இலவசமாய்ப் பேரின்பம் வழங்கும் பிழை ஓர் உன்னதமான கலை... அதை அறுபத்தைந் தாவது கலையாக ஏற்றுக்கொள்..." *(வா இந்தப் பக்கம், ப.50)*: கேலியும் கிண்டலும் கொப்பளித்து நிற்கப் 'பிழைகள் தரும் பேரின்பம்' என்னும் கட்டுரையில் மீரா எழுதி இருக்கும் சுவையான வரிகள் இவை!

"'மனிதன்' — இந்தச் சொல் மனிதன் கண்ட சொற்களில் மகத்தான சொல் என்கிறார் கார்க்கி" *(எதிர்காலத் தமிழ்க் கவிதை, ப.35)*; "'தேனீக்களைப் போல் இரைச்சலிட்டுக் கொண்டும் நத்தையைப் போல் ஊர்ந்தும் பாம்பைப் போல் வளைந்தும் அரிசிக் கடையை நோக்கி மக்கள் வரிசை சென்றது' என்று கே.ஏ.அப்பாஸ் ஒரு கதையில் எழுதினார்" *(வா இந்தப் பக்கம், ப.19)* என்றாற் போல் வாய்ப்பு நேரும் போதெல்லாம் தம் கட்டுரைகளின் இடையே பிறமொழிப் படைப்பாளர்களின் அரிய கருத்துக்களையும் உயிர்ப்பான இடங்களையும் மேற்கோள் காட்டி எழுதிச் செல்வது மீராவின் தனிப்பாணி; அவருக்கு விருப்பமான உத்தியும் கூட.

"கலைவாணர் என்.எஸ்.கே. ஒருமுறை குதிரை வண்டிக் காரர்கள் மாநாட்டில் பேசும்போது 'உங்கள் மீதுதான் எனக்கு அதிக

மரியாதை! நீங்கள் தான் யாரையும் முன்னுக்கு வாங்க! முன்னுக்கு வாங்க! என்று சொல்லுகிறீர்கள்' என்று குறிப்பிட்டார். இப்போது ஒவ்வொரு சாதித் தலைவரும் 'பின்னுக்கு வாங்க! பின்னுக்கு வாங்க!' என்கிறார்கள். பின்னுக்கு வந்தால்தான அவர்கள் முன்னுக்கு வர முடியுமாம். பதுங்கினால் தான் பாய முடியுமாம்!" (வா இந்தப் பக்கம், ப.57): என்றாற் போல் சுவையான வாழ்க்கை நிகழ்ச்சிக் குறிப்புக்களையும் (Ancedotes) பயனுள்ள தகவல்களை யும் மீரா தம் கட்டுரைகளில் ஆங்காங்கே கையாண்டு எழுதிச் செல்வது உண்டு.

'எழுத்தாளர் பார்வையில் ஆசிரியர்' என்னும் கட்டுரையில் கேரளத்தின் கல்வி அமைச்சராக இருந்த பேராசிரியர் முண்டசேரி எழுதிய 'பேராசிரியர்' நாவலில் இருந்து மீரா மேற்கோள் காட்டும் ஓர் உருக்கமான காட்சி:

"பக்கத்து வீட்டுப் பிள்ளைகள் புத்தாடை உடுத்தி வெளியே புறப்படும்போது லோப்பஸின் குழந்தைகள் பொருமுகின்றன. 'நமக்கு இப்படிப் புதுச்சொக்காய் வாங்கிக் கொடுக்கிறாரா? என்ன அப்பா நம்ம அப்பா?' என்கிறது ஒரு குழந்தை. 'நம்ம அப்பா கையிலே காசு இல்லை. கிடைச்சதும் வாங்கித் தருவார்' என்று இன்னொரு குழந்தை பதில் சொல்கிறது. இந்த சமாதானம் மூத்த பையனுக்குப் பிடிக்கவில்லை.

அவன் வெடிக்கிறான்: 'காசு இல்லாமலிருந்தா எதுக்காக அப்பாவாகணும்? காசு இல்லாமலிருந்தா நான் அப்பாவாக மாட்டேன்!'" *(மீரா கட்டுரைகள், ப.151)*

*"மாதங்களில் அவள் மார்கழி,*
*மலர்களிலே அவள் மல்லிகை!"*

என்பது கண்ணதாசம். மீராவோ,

*"மாதங்களில் அவள் மார்கழி,*
*கிழமைகளில் அவள் ஞாயிறு!"*

*(வா இந்தப் பக்கம், ப.90)*

எனப் புதுமொழி படைப்பார்.

**"கண்டனன் கற்பினுக்கு அணியைக் கண்களால்"**

என்னும் அனுமனின் புகழ் பெற்ற கூற்று, மீராவின் கைவண்ணத்தில்.

"கண்டனன் காலினுக்கு அணியை...!"
*(வா இந்தப் பக்கம், ப.35)*

எனப் புதுக்கோலம் கொள்ளும்.

"புதுக்கவிதையின் உருவம் திருமலை நாயக்கர் மஹால் தூணைப் போல் தூலமாகத் தெரிவதில்லை. மண்ணில் மறைந் திருக்கும் பொன்னைப் போல் சூக்குமமாகவே தெரியக்கூடியது" *(எதிர்காலத் தமிழ்க் கவிதை, ப.70)*; "பாரதியை ஞாயிறு என்றால் பாரதிதாசனைத் திங்கள் எனலாம். அந்தத் திங்களைச் சுற்றி விளங்கும் விண்மீன்களைப் போல இன்று கவிஞர் பலர் உள்ளனர்" *(எதிர்காலத் தமிழ்க் கவிதை, ப.13)*; "முன்னது குளிர்காலத்தில் வெந்நீரில் குளிப்பது போன்ற சுகம் தரும் வெப்பம்; பின்னது சிதையில் உயிரோடு கொளுத்துவது போன்ற சுடுகாட்டு வெப்பம்" *(மீரா கட்டுரைகள், ப.100)*; "குடியான வர்களின் கன்னங்கள் போல் குண்டுங்குழியுமாய்க் கிடக்கும் தெருக்கள்..." *(வா இந்தப் பக்கம், ப.103)*; "கொஞ்சமும் களங்க மில்லாமல் நண்பரின் முகம் 'எடுக்கவோ கோக்கவோ' என்று கர்ணனிடம் கேட்ட துரியோதனின் முகம் மாதிரி இருந்தது" *(வா இந்தப் பக்கம், ப.83)* — மீராவின் கட்டுரைகளில் இப்படி எத்தனையோ வித்தியாசமான, தனித்தன்மை கொலுவிருக்கும் உவமைகள் ஆட்சி செய்கின்றன.

"எதை எழுதினாலும் கவிதையின் நயத்தோடு எழுதும் ஆற்றல் உடையவர் மீரா. அவர் உரைநடை எழுத்தில் கூட கவிதைக்குரிய வடிவக் குணம் (Formal Characteristics) அமைவதை நான் கவனித்து வந்துள்ளேன்" *(பக்.7—8)* என 'எதிர்காலத் தமிழ்க் கவிதை' நூலுக்கு எழுதிய அணிந்துரையில் குறிப்பிடுவார் பேராசிரியர் பாலா. இக்கூற்றுக்கு இணங்க, மீராவின் கட்டுரை களில் கவிதையின் நயத்தையும் நேர்த்தியையும் பரக்கக் காண முடிகின்றது. எதுகையும் மோனையும் இயைபும் முரணும் அழைத்த போதெல்லாம் ஓடிவந்து அவரது உரைநடைக்கு அழகும் ஆற்றலும், மெருகும் மேன்மையும் சேர்த்திடக் காண்கிறோம். இவ்வகையில் குறிப்பிடத்தக்க சில சான்றுகள் இதோ!

1. "புதுவைச் சட்ட மன்றத் தேர்தலில் நின்று தோற்றாலும் பாரதிதாசன் என்றும் மக்கள் மன்றத்தின் பிரதிநிதியாக இருக்கத் தவறியதில்லை" *(எதிர்காலத் தமிழ்க் கவிதை, ப.11)*

2. "தமிழ்ஒளி காலத்தை வென்ற கவிஞர்; அவர் இறந்து விட்டாலும் அவர் இயற்றிய பாடல்கள் பல சாகா வரம் பெற்று இருக்கின்றன" *(எதிர்காலத் தமிழ்க் கவிதை, பக்.19—20)*

3. "இராமனின் கால்வண்ணம் கண்ட அகல்யை எத்தனை யோ சிறுகதை ஆசிரியர்களின் கைவண்ணம் கண்டும் இருக்கிறாள்" *(எதிர்காலத் தமிழ்க் கவிதை, ப.31)*

4. "இதே போல் மண் பேசுவதாக அப்துல் ரகுமான் எழுதிய கவிதையும் ஒரு பொன்னான கவிதை" *(எதிர்காலத் தமிழ்க் கவிதை, ப.52)*

5. "கவிதையின் கட்டழகைச் சரியாகக் காட்டுவதில் முரண் தொடைக்கு முக்கிய பங்கு உண்டு." *(எதிர்காலத் தமிழ்க் கவிதை, ப.66)*

6. "நிலாவைப் பற்றி இதுவரை வெளிவந்துள்ள கவிதைகள் நட்சத்திரங்களைப் போல் எண்ணற்றவை" *(எதிர்காலத் தமிழ்க் கவிதை, ப.78)*

7. "எதையும் வித்தியாசமாகச் சொல்வதென்பது வேறு. விகாரமாகச் சொல்வதென்பது வேறு" *(எதிர்காலத் தமிழ்க் கவிதை, ப.84)*

இங்ஙனம் பல்வகை வண்ணங்களையும் வனப்புகளையும் தன்னகத்தே கொண்ட கலைப் பெட்டகமாகவும் கருத்துப் பேழையாகவும் தகவல் களஞ்சியமாகவும் மீராவின் கட்டுரைகள் விளங்குகின்றன.

## இலக்கிய ஆர்வலர்களின் எதிர்பார்ப்பு

'எதிர்காலத் தமிழ்க் கவிதைகள்', 'வா இந்தப் பக்கம்', 'மீரா கட்டுரைகள்' ஆகிய மூன்று நூல்களின் தொடர்ச்சியாக, மீரா எழுதிய 'சுவடு கட்டுரைகள்', மூட்டா ஆசிரியர் இதழின் கடைசிப் பக்கக் கட்டுரைகள் போன்ற அவரது பிற கட்டுரைகளும் தொகுக்கப் பெற்று நூல் வடிவில் வெளிவர வேண்டும்; தமிழ் பயன்பெற வேண்டும். இதுவே இலக்கிய ஆர்வலர்களின் ஒருமித்த எதிர்பார்ப்பும் விருப்பமும் ஆகும்.

## 8. நகைச்சுவையாளர்

*"நோய்களால் முற்றுகையிடப்பட்டு, முடக்கப்பட்டுக் கிடக்கிற அந்தப் பொழுதில் கூட, அவருடைய நகைச்சுவை உணர்வு அவரை விட்டுப் பிரியவில்லை. 'ஊசிகள்' தொகுப்பில் உள்ள அதே நகைச்சுவை உணர்வுதான் இந்த நேரத்திலும் அவரிடம் உலவியது."* — பா.செயப்பிரகாசம்*

எண் வகை மெய்ப்பாடுகளைச் சுட்டும் நூற்பாவில் *(1197)* ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர் நகைச்சுவைக்கு முதல் இடம் தந்திருப்பது நோக்கத்தக்கது. அதற்குப் பேராசிரியர் தம் தொல்காப்பிய உரையில் 'மற்று நகையை முன்வைத்தது என்னையெனின்... விளையாட்டுப் பொருட்டாகிய நகையை முன்வைத்தான் என்பது' *(தொல்காப்பியம்: பொருளதிகாரம், பேராசிரியம், ப.5)* என நுண்ணிய காரணமும் கற்பிப்பார். வள்ளுவரும் 'பண்புடைமை' அதிகாரத்தில் வரும் ஒரு குறட்பாவில், 'நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம், பகலும்பாற் பட்டன்று இருள்' *(1999)* என மொழிவார். 'யாரோடும் சிரித்துப் பழகத் தெரியாதவர்க்கு இப்பேருலகம் பகற்காலத்தும் இருளாகத் தோன்றும்' என்பது இக்குறட்பாவின் தெளிவுரை. 'வஞ்சனையும் பொய்யும் உடையவளோடு கூடி ஆடியதால் நம் குலத்தார் தேடித் தந்திருந்த குன்றனைய பெருஞ்செல்வத்தை எல்லாம் அழித்து வறுமையாளன் ஆயினேன். இச்செயல் எனக்கு வெட்கத்தைத் தருகிறது' எனச் சொல்லி வருந்திய கோவலனிடம், 'நலம்கேழ் முறுவல் நகைமுகம் காட்டி' — தன் ஒளி பொருந்திய அழகிய முகத்திலே சிறுமுறுவல் தோன்ற, 'சிலம்புள கொண்ம்' *(சிலப்பதிகாரம்: புகார்க் காண்டம், கனாத்திறம் உரைத்த காதை, அடி 70—73)* — 'சிலம்புகள் உள்ளன; அவற்றை எடுத்துக் கொள்ளுங்கள்' எனக் கூறிய கண்ணகியை நெஞ்சை அள்ளும்

---

* *அறிவுமதி & கதிர் (தொகுப்பாசிரியர்கள்), காலத்தின் குரல், ப.76.*

சிலம்பு நமக்குக் காட்டும். இங்ஙனம் வாழையடி வாழை எனத் தொடர்ந்து வரும் இக்கவிஞர் வரிசையில் கவிஞர் மீராவும் இடம்பெறுகிறார். அவர் தம் வாழ்விலும் வாக்கிலும், எப்போதும், எந்தச் சூழ்நிலையிலும் நகைச்சுவை உணர்வுக்குச் சிறப்பான ஓர் இடத்தினைத் தந்து வந்துள்ளார்.

'இடுக்கண் வருங்கால் நகுக' (திருக்குறள்: 621) என்னும் வள்ளுவர் வாக்கிற்கு இணங்க மீரா முதுமையில் பக்கவாத நோயால் தாக்கப்பட்ட போது கூட தமது நகைச்சுவை உணர்வினை முற்றிலுமாக இழந்து விடவில்லை. இந்நிலையிலும், 'வராத விருந்தாளியாக நோய் வந்திருக்கிறது. உபசரிக்க வேண்டும்' என்று அவர் கவிஞர் சிதம்பரநாதனிடம் கூறினாராம் (அறிவுமதி & கதிர், காலத்தின் குரல், ப.15). இங்ஙனம் இடுக்கண் வருங்கால் நகும் திறம் கைவரப் பெற்றவராக மீரா தம் வாழ்நாளின் இறுதி மூச்சு வரை இருந்து வந்துள்ளார்.

'நகை என்பது சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச் சிரித்தலும் என மூன்று என்ப' (தொல் காப்பியம்: பொருளதிகாரம், பேராசிரியம், ப.4) என்பது பேராசிரியரின் பாகுபாடு. முறுவலித்து நகுதல், அளவே சிரித்தல், பெருகச் சிரித்தல் என்னும் மூவகையான நகைச்சுவையின் ஆட்சியையும் மீராவின் படைப்புலகில் ஆங்காங்கே காண முடிகின்றது. ஒரு பறவைப் பார்வையில் அவற்றைக் குறித்து இங்கே காணலாம்.

### கவிதை மொழியில் நகைச்சுவை உணர்வு

மீராவின் கவிதை மொழியில் துலக்கமாகவும் தூக்கலாகவும் தெரிவது அவரது நகைச்சுவை உணர்வு ஆகும். இன்றைய சமூகத்தின் போக்கையோ மனிதனின் பண்பையோ நகைச்சுவையோடு எள்ளுவது என்பது அவருக்குக் கை வந்த கலை; அவரது முத்திரைப் பண்பும் கூட. இதனை அவரது மரபுக் கவிதை, கவியரங்கக் கவிதை, வசன கவிதை, புதுக்கவிதை, குக்கூ கவிதை ஆகிய அனைத்துக் கவிதை வடிவங்களிலும் காணலாம். சான்றாக, மீராவின் நகைச்சுவை கலந்த எள்ளல் திறத்திற்குக் கட்டியம் கூறும் 'குக்கூ' ஒன்று வருமாறு:

*"இலக்கியக் கூட்டம்*
*பரவசமூட்டும் பக்திக் கூட்டம்*

*எந்தக் கூட்டம் என்றாலும்*
*வைர மூக்குத்தி கடுக்கன் சகிதம்*
*முன்னால் இருப்பாள்*
*அந்த மாது*
*காது மட்டும் கேட்காது"* (குக்கூ, ப.23)

காது கேட்காத அந்த மாது இலக்கியக் கூட்டம், பக்திக் கூட்டம் என எல்லாக் கூட்டங்களுக்கும் தவறாமல் வருவது — வந்து முன்னால் அமர்ந்திருப்பது — கூட்டங்கள் கேட்பதற்காக அல்ல; தான் அணிந்திருக்கும் வைர மூக்குத்தி, கடுக்கன் ஆகியவற்றை மற்றவர்களுக்குக் காட்டுவதற்காகத்தான். படிப்பவர் முகத்தில் மெல்லிய நகையைப் படரவிடும் அழகிய 'குக்கூ' இது!

நல்ல நகைச்சுவை என்பது சொல்லி வருவதில்லை; திட்டமிட்டுப் பிறப்பதுமில்லை. தானாக, இயல்பாகப் பீறிட்டு வருவது தான் நல்ல நகைச்சுவையின் அடையாளம்; இலக்கணம். இதற்கு இலக்கியமாக விளங்கும் ஒரு 'குக்கூ' இதோ:

*"வாத்தியார் மனைவி / செத்ததற்காக*
*விடுமுறை...*
*மகிழ்ச்சியில் குதித்த / மணிப்பயல் கேட்டான்:*
*'வருத்தமாயிருக்கு,*
*ஒரே ஒரு மனைவி தானா*
*அவருக்கு?' "* (குக்கூ, ப.43)

கவிஞர் சிற்பி கூறுவது போல், "மீராவின் நகைச்சுவை வேப்பம் பூப் பச்சடி, இனிப்புப் பூசிய மருந்து பாறையையும் நெகிழ்விக்கும் பசும்புல்லிதழ்" (அணிந்துரை, மீராவின் 'கோடையும் வசந்தமும்', ப.11).

நகைச்சுவையின் பரிமாணங்களுள் தலையாயது அங்கதம். தொல்காப்பியர் செம்பொருள் அங்கதம், பழிகரப்பு அங்கதம் என அங்கதத்தின் இரு வகைகளைச் சுட்டுவார். 'தமிழ் அங்கதக் கவிதைகளின் தொகுப்பு' என்னும் சிறப்புக் குறிப்புடன் 1974—ஆம் ஆண்டில் வெளிவந்த மீராவின் கவிதைப் படைப்பு 'ஊசிகள்'. இதில் 'வேகம்' என்னும் தலைப்பில் இடம்பெற்றுள்ள முதல் கவிதை வருமாறு:

"எங்கள் ஊர் எம்.எல்.ஏ./ ஏழு மாதத்தில்
எட்டுத் தடவை / கட்சி மாறினார்
மின்னல் வேகம் / என்ன வேகம்?

இன்னும் எழுபது / கட்சி இருந்தால்
இன்னும் வேகம் / காட்டி இருப்பார்...
என்ன தேசம் / இந்தத் தேசம்?" (ஊசிகள், ப.13)

நமது அரசியல்வாதிகள் வேகம் காட்டுவது நாட்டை முன்னேற்றுவதில் அல்ல; வறுமையை ஓட ஓட விரட்டுவதில் அல்ல; தொகுதியை வளப்படுத்துவதில் அல்ல. அவர்கள் கட்சி விட்டுக் கட்சி தாவுவதில்தான் வேகம் காட்டுவார்கள்; அதுவும் ஏழு மாதத்தில் எட்டுத் தடவை மின்னல் வேகத்தில் கட்சி மாறுவார்கள். இன்னும் கூடுதலாகக் கட்சிகள் இருந்திருந்தால் அவர்கள் இன்னும் வேகம் காட்டி இருப்பார்கள். 'என்ன தேசம் இந்தத் தேசம்?' என்னும் அங்கதக் குறிப்புடன் கவிதை நிறைவடைவது சிறப்பு.

கூர்மையான சமூக விமர்சனப் பார்வை படைத்தவர் மீரா. 'வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவது போல' என்பார்களே, அதுபோல இன்றைய சமூக நடப்பினை — சம கால மனிதர்களின் போக்கினை — நகைச்சுவையுடன் குத்திக் காட்டுவது அவரது தனித்தன்மை. 'மீசை இருந்தது!' என்ற மரபுக் கவிதை இவ்வகையில் குறிப்பிடத்தகுந்தது. இக்கவிதை மலேசிய இதழ் ஒன்றில் 1964—ஆம் ஆண்டில் வெளிவந்தது. ஆலமரத்தின் அடியில் ஒருவன், சிட்டுக்குருவியைச் சீட்டுக் குருவியாய் ஆக்கி ஏதோ அளந்து கொண்டிருந்தானாம்; 'எதிர்காலத்தைப் பார்க்கலாம்' என்று கவிஞர் அவனிடம் கேட்டு காசளித்தாராம். உடனே அவன் கூண்டைத் திறந்தானாம்; குருவியும் வந்ததாம்; வந்த குருவி வழக்கப்படி ஒரு சீட்டை எடுத்துக் கொடுத்துச் சென்றதாம். அதனைப் பிரித்துப் படித்தாராம் கவிஞர். 'விரைவில் நல்ல அம்சமும் செல்வமும் அமையப்பெற்ற கணவன் கிடைப்பான்— கவலைப்படாதே' என்று அச்சீட்டில் எழுதி இருந்ததாம்! சீட்டைக் கீழே போட்டுச் சிரித்தாராம் கவிஞர். 'ஒருகால் மங்கையாய் இந்நேரம் மாறி இருக்கலாம்' என்று நிசமாய் எண்ணிப் பயந்து, மீசையைத் தடவிப் பார்த்தாராம்!

'மீசை இருந்தது மிகப் பெரிதாகவே!' என்னும் வரியுடன் முடிவடையும் அக்கவிதையில் இயல்பான கேலியும், கூர்மையான குத்தலும் கைகுலுக்கி நிற்பதைக் காணலாம்.

மீராவின் எழுத்தில் இழையோடும் இயல்பான நகைச் சுவைக்குப் பிறிதோர் எடுத்துக்காட்டு: 'எங்கும் சுவரொட்டி! எதற்கும் சுவரொட்டி!' 'இனிமேல் சுவரொட்டி இல்லாமல் சுவைக்காது எதுவும் இங்கே!' என்பதைக் காட்டும் விதத்தில் மீரா படைத்துள்ள சில நகைச்சுவை வாசகங்கள் இதோ:

*"கடைக்குப் போய்வந்த –/ காய்கறி வாங்கிவந்த*
*கர்ம வீரனே வருக!*

*பற்றுத் தேய்த்துப் / படிப்படியாய்*
*சமையல்காரியாய்ப் / பதவி உயர்வு பெற்ற*
*பங்கஜமே வருக!*

*கீர்த்தி மிகுந்த / கேம்பிரிட்ஜ் பள்ளியிலே*
*எல்.கே.ஜி. வகுப்பிலே / இனிதாகச் சேர வந்த*
*இளந்தளிரே வருக!"* (கோடையும் வசந்தமும், ப.70)

இன்றைய சூழலில் இப்படிச் சுவரொட்டிகள் இல்லாமல் சுவைக்காது எதுவும் இங்கே எனத் தமக்கே உரிய நகைச்சுவைப் பாணியில் எழுதிச் செல்கிறார் மீரா.

**கவியரங்கக் கவிதைகளில் நகைச்சுவை**

மீராவின் கவியரங்கக் கவிதைகளிலும் ஆங்காங்கே நகைச்சுவை உணர்வின் ஆட்சியைக் காண முடிகின்றது. பதச்சோறாக, 'மூன்று' என்னும் தலைப்பில் அவர் பாடிய கவியரங்கக் கவிதையில் இருந்து ஒரு சுவையான பகுதியை இங்கே சுட்டிக்காட்டலாம். 'மனைவி' என்றும், 'வாழ்க்கைத் துணைவி' என்றும் மணித்தமிழில் இணையான சொல் இருக்க, 'இல்லாள்' என்று ஒரு சொல் ஏன்? என்னும் வினாவினை எழுப்பிக் கொண்டு, அதற்கு மீரா தரும் விடை நகைச்சுவை பயப்பதாகும். அதனை அவரது சொற்களிலேயே இங்கே காணலாம்:

"இல்லத்தை ஆளும் / இயல்புடையாள் என்பதனால்
'இல்லாள்' எனப்பட்டாள்/ பெண் என்பர்; என்றாலும்
'அரிசி இல்லை உப்பு இல்லை/அடுப்பு எரிக்க விறகு இல்லை
கறிக்கடைக்குச் சென்றுவரக்/ கையில் பணம் இல்லை'
என்று தினம் 'இல்லை' எனும்/ மூன்று எழுத்துப் பல்லவியை
நின்று இசைக்கும் காரணத்தால்/ நேரிழையாளை முன்னோர்
'இல்லாள்' என்றார் என்பேன்;/ இதைக் கேட்டுச் சீறிவர
நல்லவேளை—என்றன்/ நாயகியாள் இங்கு இல்லை"
(மூன்றும் ஆறும், ப.79)

கவியரங்க மேடையில் இவ்வரிகள் கவிஞரால் வாசிக்கப் படும்போது, அவையினரின் ஒட்டுமொத்த வரவேற்பையும் பலத்த கர ஒலியையும் பெற்றிருக்கும் என்பது உறுதி. 'இல்லாள்' பற்றிய மீராவின் இந்நகைச்சுவை இன்று பொதுமேடைகளில்— ஊடகங்களில் — பலராலும் பெயர் சுட்டப் பெறாமல் கையாளப்பட்டு வருவது அனைவரும் அறிந்ததே.

**உரைநடையில் உலா வரும் நகைச்சுவை**

கவிதையில் மட்டுமன்றி, மீராவின் உரைநடையிலும் நகைச்சுவை உணர்வு ஆங்காங்கே களிநடம் புரிந்து நிற்பதைக் காணலாம். சின்னச் சின்ன விஷயங்களைக் கூட அதிஅற்புத மாகவும் நகைச்சுவை உணர்வோடும் எழுதுவதில் வல்லவர் ஐரிஸ் எழுத்தாளர் ராபர்ட் லிண்ட். 'என் செல்ல எழுத்தாளர்' என்று அவரைத் தம் கட்டுரை ஒன்றில் மீரா குறிப்பிட்டுள்ளார். லிண்டின் பாணியைப் பின்பற்றி 'பிழைகள் தரும் பேரின்பம்' என்னும் தலைப்பில் அவர் ஒரு சுவையான கட்டுரையையும் எழுதியுள்ளார். அக் கட்டுரையில் நகைச்சுவை உணர்வு ததும்பி நிற்கும் ஓர் இடம் இதோ:

"முன்பு மதுரைப் பல்கலைக்கழகத்தில் ஒரே இடத்தில் ஆசிரியர்களைக் கூட்டி வைத்துத் தேர்வுத் தாள்களைத் திருத்தச் சொல்லும் வழக்கம் இருந்தது. அப்போது ஆசிரியர்கள்

தங்களுக்குத் தனித்தனியே கிடைத்த பேரின்பத்தை மற்றவர் களோடு சமமாய்ப் பங்கிட்டுக் கொள்வார்கள். 'என் மாணவன் என்ன அழகாய் எழுதுகிறான் பாருங்கள்... கேவலன் மாதவி வீட்டில் தன் அஸ்தியைக் கரைத்தான்...' இப்படிச் சொன்னதும் அந்த மாணவரின் 'தனக்குவமையில்லாத தாளைப்' பார்க்க ஒவ்வொருவராக ஓடி வருவார்கள். பார்த்து விட்டு விதவிதமாகச் சிரிப்பார்கள். திடீரென்று ஒருவர் அந்த மாணவரின் 'திருவாசக'த்துக்கு நயம் சொல்வார். 'பையன் உணர்ச்சியுள்ளவன் ஐயா; மனைவி இருக்கும்போது இன்னொருத்தியைக் கோவலன் நாடிப் போனதை அவனால் சகிக்க முடியவில்லை. கேவலமான காரியத்தைச் செய்ததால் 'கேவலன்' என்று அவன் பெயரை மாற்றி வைத்து விட்டான் ஐயா... மன்னன் நெடுஞ்செழியன் கோவலன் தலையை வாங்கினான். நம் மாணவன் நெடுஞ்செழியன் தன் சக்திக்கேற்ப கோவலனின் காலை வாங்கியிருக்கிறான்' என்று பாராட்டுவார். மண்டபமே சிரிப்பில் மூழ்கும்" *(வா இந்தப் பக்கம், பக். 43—44).*

"இப்போது கண்டபோது மயக்கம் தரும் சினிமாவோடு உண்டபோது மயக்கம் தரும் சாராயமும் கிடைத்துவிட்டது. தமிழர்கள் அதிர்ஷ்டசாலிகள்" *(வா இந்தப் பக்கம், ப.21);*

"கோவில்களில் பாதுகைகளுக்கு எவ்வளவு பாதுகாப்பு இருக்கிறது... இல்லாவிட்டால் ஆண்டவனின் திருவடிகளை விட்டு பக்த கோடிகளின் மனம் தம் மிதியடிகளையல்லவா நினைத்துக் கொண்டிருக்கும்" *(வா இந்தப் பக்கம், பக்.38—39)* என்றாற்போல் மீராவின் கட்டுரைகளில் வரும் இடங்கள் அவரைத் தீராத விளையாட்டுக் குறும்பு கொண்ட ஒரு நகைச்சுவையாளராக அடையாளம் காட்டி நிற்கின்றன.

சமுதாய நடைபாதைகளைச் செப்பனிடுவதற்கு மீரா நகைச்சுவை உணர்வைத் தம் கவிதைகளிலும் கட்டுரைகளிலும் வலிமை வாய்ந்த ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொண்டுள்ளார். பேராசிரியர் பாலா சுட்டிக்காட்டுவது போல், "மீரா கவிதையின் அடிப்படை வெளியீட்டு மொழி எள்ளலும் கேலியும், அவை கிளத்தும் நகை நயந்த சமூக விமர்சனமும் தாம்!" *(அணிந்துரை, மீராவின் 'குக்கூ' ப.9).*

# 9. 'காலத்தின் குரல்'

*"அவர் (மீரா) ஒரு மாமனிதர்; சொல்லிலும் செயலிலும்; முதலிலிருந்து இறுதி வரை."*

*— கந்தர்வன்**

இலக்குமி அம்மாளும் எஸ்.மீனாட்சிசுந்தரமும் மீராவின் தாய்தந்தையர்; பாவேந்தர் பாரதிதாசன் அவரது குரு; மகாகவி பாரதி அவரது தெய்வம். இயற்பெயர் மீ.இராசேந்திரன். பிறந்தது சிவகங்கைச் சீமையில்; பள்ளிப் படிப்பு பயின்றது இராமநாத புரத்தில்; கல்லூரி வாழ்க்கை தொடர்ந்தது சிவகங்கையிலும், மதுரையிலும். தீந்தமிழ்த் தியாகராசர் கல்லூரியின் பெருமை மிகு வார்ப்பு மீரா.

இளமைப் பருவத்திலேயே திராவிட இயக்கக் கொள்கை களாலும் பொதுவுடைமைச் சிந்தனைகளாலும் ஈர்க்கப் பெற்றார் மீரா. திராவிட இயக்கம் அவரை ஒரு சீர்திருத்தவாதியாக — முற்போக்குச் சிந்தனையாளராக — மனித நேயம் கொண்டவராக — வளர்த்தது; பொதுவுடைமை இயக்கத் தலைவர்களின் எளிமை, பரிவு, வர்க்கக் கண்ணோட்டம், நெஞ்சுறுதி, போர்க்குணம் ஆகிய பண்புகள் அவரைப் பெரிதும் கவர்ந்தன. மொத்தத்தில் திராவிட இயக்கச் சார்பும் பொதுவுடைமைச் சிந்தனையின் தாக்கமும் சரி விகிதத்தில் ஒன்று சேர்ந்து அமைந்த கூட்டுக்கலவையாக மீராவின் ஆளுமை காலப் போக்கில் பரிமாணமும் பரிணாமமும் பெற்றது.

*"பொன்னுக்கோ, இல்லை / புகழுக்கோ பாடவில்லை;*
*என் மனிதச் சாதி/ எழுச்சிக்கே பாடுகிறேன்!...*
*மன்பதையின் ஞான / மலர்ச்சிக்கே பாடுகிறேன்!...*
*புன்மை களையும் / புரட்சிக்கே பாடுகிறேன்!"*

(கோடையும் வசந்தமும், பக்.31–32)

---

* அறிவுமதி & கதிர் (தொகுப்பாசிரியர்கள்), காலத்தின் குரல், ப.66.

என்னும் உயரிய குறிக்கோள் முழக்கத்துடன் தமிழ்க் கவிதை உலகில் 1965—ஆம் ஆண்டில் 'இராசேந்திரன் கவிதைகள்' என்னும் தொகுப்பின் மூலம் அடியெடுத்து வைத்தவர் மீரா. இத் தொகுப்பிற்குப் பிறகு வந்த அவரது 'மூன்றும் ஆறும்' (1967), 'கனவுகள்+ கற்பனைகள் = காகிதங்கள்' (1971), 'ஊசிகள்' (1974) ஆகிய நூல்கள் பல பதிப்புகள் கண்டுள்ளன. மீராவின் முதல் நூலான 'இராசேந்திரன் கவிதைகள்', 'மீரா கவிதைகள்' என்று பெயர் மாற்றம் பெற்று 2002—ஆம் ஆண்டில் வெளிவந்தது. இதே ஆண்டில் மீராவின் 'குக்கூ' (2002), 'கோடையும் வசந்தமும்' (2002) என்னும் இரு கவிதைத் தொகுதிகளும் வெளிவந்தன. மீராவின் கவிதைப் படைப்புக்களைப் பொறுத்த வரையில், அவரது ஒவ்வொரு தொகுதியிலும் ஒரு புதிய நவில்முறையைக் (Way of Expression) காண முடிகின்றது.

மீராவின் முதல் நூலான 'இராசேந்திரன் கவிதைகள்' என்னும் தொகுப்பு 'திராவிட இயக்கக் கவிஞர்', 'பாவேந்தர் பாரதிதாசனின் வாரிசு' என்னும் பெயரினை அவருக்குப் பெற்றுத் தந்தது.

'மூன்றும் ஆறும்' என்னும் தொகுப்பு கவியரங்கக் கவிதை உலகில் தடம் பதித்தது.

'கனவுகள்+ கற்பனைகள் = காகிதங்கள்' ஒரு புதிய மரபை—செல்நெறியை (Trend Setting) — உண்டாக்கியது; அந்நூல் எழுபதுகளில் இளைஞர்களின் காதல் வேதமாகவே விளங்கியது; அதன் அடிச்சுவட்டில் வசன கவிதைக் காதல் தொகுதிகள் பற்பல வெளிவரக் காரணமாகவும் அமைந்தது. இது இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை உலகில் ஓர் இன்றிமையாத வரலாற்றுப் பதிவு ஆகும்.

மீராவின் 'ஊசிகள்' தொகுப்பு உருவம், உள்ளடக்கம், உத்தி, மொழி ஆகியவற்றில் அவரது முந்தைய தொகுப்புக்களில் இருந்து வேறுபட்டு இருந்தது. 'கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்' தொகுப்பின் மொழி பூவின் மேல் படிந்திருக்கும் பனித்துளியைப் போல் இருந்தது என்றால், 'ஊசிகள்' தொகுப்பின் மொழி சமுதாய அங்கதம் என்ற அதன் பாடுபொருளுக்கு ஏற்ப, சிறிதாக, கூராக, நறுக்கென்று இருந்தது. 'இந்தச் சமூகம் வாழைப்பழம். மீராவின் கவிதைகளோ ஊசிகள்' (பிற்சேர்க்கை, மீராவின் 'குக்கூ', ப.81) என இந்நூலினை மதிப்பிட்டுள்ளார் கவிஞர் தமிழ்நாடன்.

கவிஞர் இன்குலாப் குறிப்பிடுவது போல் “ஊசிகளைப் போல அவர் (மீரா) தொடர்ந்திருந்தால், தமிழில் எள்ளல் இலக்கியம் உலக அரங்கில் பேசப்பட்டிருக்கும்” [அறிவுமதி & கதிர் (தொகுப்பாசிரியர்கள்), காலத்தின் குரல், ப.42].

நீண்ட கால இடைவெளிக்குப் பின் வெளிவந்த மீராவின் ‘குக்கூ’ தொகுப்பும் அவரது முந்தைய தொகுதிகளில் இருந்து மாறுபட்டு அமைந்திருந்தது. கவிக்கோ அப்துல் ரகுமான் சுட்டிக்காட்டி இருப்பது போல், “ ‘குக்கூ’வின் தனித்தன்மை ஹைகூவைத் தமிழ்ப்படுத்தி இருப்பது... நகைச்சுவையோடு எள்ளுவது மீராவுக்குக் கைவந்த கலை” (அணிந்துரை, குக்கூ, ப.7).

கவிதைக் கலை மட்டுமன்றி, கட்டுரைக் கலையும் மீராவுக்கு வசப்பட்டது. பத்திரிகைக் கட்டுரை, மலர்க் கட்டுரை, ஆய்வுக் கட்டுரை, கடைசிப் பக்கக் கட்டுரை என எந்த வடிவில் படைத்தாலும் அவரது கட்டுரை ஒவ்வொன்றிலும் இலக்கியத் தோய்வும் ரசனை உள்ளமும் நகைச்சுவை உணர்வும் களிநடம் புரிந்து நின்றன. ‘பிழைகள் தரும் பேரின்பம்’ என்னும் ஒரு கட்டுரை போதும், அவரது கட்டுரை வண்ணத்தையும் வனப்பையும் காட்ட.

‘மண்ணியல் சிறுதேர் — ஒரு மதிப்பீடு’ (1968) என்னும் நூல் மீராவை ஆழ்ந்து அகன்று நுண்ணிய பார்வையும் புலமையும் படைத்த ஓர் ஆய்வாளராக அடையாளம் காட்டியது. பல்வேறு நூல்களுக்கு மீரா அளித்துள்ள முன்னுரைகள் ‘முகவரிகள்’ (1983) என்னும் தலைப்பில் வெளிவந்துள்ளன. அவை அவரது இலக்கியக் கோட்பாட்டைத் தெளிவுபடுத்துவதோடு, இளைய படைப்பாளிகளை வரவேற்றுப் போற்றும் தாயுள்ளத்தையும் புலப்படுத்தி நிற்கின்றன.

மீராவின் ஆளுமை பேராசிரியர், போராளி, கவிஞர், கட்டுரை ஆசிரியர், ஆய்வாளர், இதழாசிரியர், பதிப்பாளர், அச்சக நிறுவனர் என்றாற்போல் பல்வேறு பரிமாணங்களைக் கொண்டது. இவை ஒவ்வொன்றிலும் அவரது தனிமுத்திரை சுடர்விட்டு நின்று அவருக்குப் பெருமை சேர்த்தது. ஒரே வரியில் மதிப்பிடுவது என்றால், ‘எதிலும் சமரசம் செய்து கொள்ளாத, எப்போதும் புன்மைக்கு எதிராகச் சமர் புரியும் ஒரு முற்போக்குச் சிந்தனையாளர் மீரா’ எனலாம்.

'அன்னம்' பதிப்பகத்தின் வாயிலாகத் தமிழ் கூறும் நல்லுலகிற்குப் பல புதிய கவிஞர்களை, எழுத்தாளர்களை அறிமுகம் செய்து வைத்தது மீராவின் தனிப்பெரும் கொடை ஆகும். கவிஞர் நீலமணியின் சொற்களில் குறிப்பிடுவது என்றால், "உ.வே.சாமிநாதையரால் பல பழைய இலக்கியங்கள் நமக்குக் கிடைத்தன. மீரா இருந்திராவிட்டால் நமக்குப் பல புதிய இலக்கியங்கள் கிட்டியிரா" (காலத்தின் குரல், ப.178).

சொல்லிலும் செயலிலும் மாமனிதராக விளங்கிய மீரா முதலில் இருந்து தமது இறுதி மூச்சு வரை ஒரு நகைச்சுவை யாளராகவும் வாழ்ந்து காட்டினார். அவரது வாழ்விலும் வாக்கிலும் கேலியும் கிண்டலும், நக்கலும் நையாண்டியும், எள்ளலும் நகைச்சுவையும் இமைப்பொழுதும் நீங்காமல் களிநடம் புரிந்து நின்றன.

'மரபில் பூத்த புதுமலர்' எனத் திறனாய்வாளர்களால் மதிப்பிடப் பெறும் கவிஞர் மீரா, 'காலத்தின் குரல்' ஆவார்; ஒற்றைச் சொல்லிலே சுட்ட வேண்டும் என்றால், அவர் ஒரு 'காலமானி'. கவிதையை வாழ்க்கையாகவும், வாழ்க்கையைக் கவிதையாகவும் ஆக்கிக் கொண்ட மீராவைத் 'தமிழியக்கம்' எனக் குறிப்பிடுவது சாலவும் பொருத்தமாக இருக்கும்.

# பின்னிணைப்பு 1

## மீராவின் நூல்கள்

### I. கவிதை

1. இராசேந்திரன்,மீ. (தொகுப்பாசிரியர்). சுவை. சிவகங்கை: அன்னை நிலையம், முதற் பதிப்பு 1962.

2. மீரா கவிதைகள். தஞ்சாவூர்: அகரம், இரண்டாம் பதிப்பு 2010.

3. மீரா. மூன்றும் ஆறும். தஞ்சாவூர்: அன்னம், ஆறாம் பதிப்பு 2003.

4. ————————————. கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள். தஞ்சாவூர்: அகரம், பதினேழாம் பதிப்பு 2012.

5. ————————————. ஊசிகள். தஞ்சாவூர்: அன்னம், எட்டாம் பதிப்பு 2008.

6. ————————. குக்கூ. தஞ்சாவூர்: அகரம், முதற் பதிப்பு 2002.

7. ——————————————. கோடையும் வசந்தமும். தஞ்சாவூர்: அகரம், முதற்பதிப்பு 2002.

II. கட்டுரை

8. மீரா. வா இந்தப் பக்கம். தஞ்சாவூர்: அன்னம், இரண்டாம் பதிப்பு 2002.

9. ——————————————. எதிர்காலத் தமிழ்க் கவிதை. தஞ்சை: அன்னம், இரண்டாம் பதிப்பு 2003.

10. ——————————————. மீரா கட்டுரைகள். தஞ்சாவூர்: அகரம், முதல் பதிப்பு 2003.

III. திறனாய்வு

11. மீரா. மண்ணியல் சிறுதேர் — ஒரு மதிப்பீடு. தஞ்சாவூர்: அன்னம், முதல் பதிப்பு 2004.

IV. முன்னுரை

12. மீரா. முகவரிகள். சிவகங்கை: அன்னம் (பி)லிட்., முதற்பதிப்பு 1983.

V. தொகுப்பு

13. மீரா. பாரதியம் கட்டுரைகள். சிவகங்கை: அன்னம் (பி) லிட்., முதற்பதிப்பு 1983.

14. ——————. சுயம்வரம். சிவகங்கை: அன்னம், முதற்பதிப்பு 1986.

15. மீரா & மோகன், இரா. அண்ணல் தமிழ். சிவகங்கை: அன்னம் (பி) லிட்., இரண்டாம் பதிப்பு 1992.

# பின்னிணைப்பு 2
# உற்றுழி உதவிய நூல்களும் இதழ்களும்

I. நூல்கள்

1. அப்துல் காதர். மீராவின் கனவுகள். சிவகங்கை: அன்னம் (பி) லிட்., முதற்பதிப்பு 1987.

2. அப்துல் ரகுமான். சோதிமிகு நவகவிதை. சென்னை: நேஷனல் பப்ளிஷர்ஸ், முதற்பதிப்பு 2004.

3. மணிமேகலை, ச. கவிஞர் மீராவின் படைப்பும் ஆளுமையும். தஞ்சாவூர்: அன்னம், முதற்பதிப்பு 2009.

4. அறிவுமதி & கதிர். காலத்தின் குரல். தஞ்சாவூர்: அகரம், முதல் பதிப்பு 2003.

5. இளங்கோவன், மு. பாரதிதாசன் பரம்பரை. ஆர்க்காடு, முகிலரசி, முதற்பதிப்பு 2001.

## II. இதழ்கள்

1. அகவல்: ஆகஸ்டு 1966.

2. ஓர் உரையாடல்… கவிதை பற்றி… கவிஞர் மீராவும் பேராசிரியர் பாவாவும். ஆனந்த விகடன் 03.11.1985 இதழுடன் இணைப்பு.

3. ஆனந்த ஜோதி: ஜூன் 2010 & மார்ச் 2012.

4. கிழக்கு வாசல் உதயம்: நவம்பர் 2010.

5. சுபமங்களா: மார்ச் 1991.

6. தாமரை: நவம்பர் 2002.

7. மண் 3: மீரா சிறப்பிதழ்

8. வளரி: கவிப்பேராசான் மீரா & கவிஞர் பாலா நினைவுச் சிறப்பிதழ், செப்டம்பர் 2011.

## ஆங்கிலம்

1. Balachandran; R. Meera: His Life and Art (Monograph).Modern Tamil Poets Series: 1. Tirunelveli, 2000.

2. Stalin (Translator). Meera: Fancies + Fantasies = Scraps. Udumalpet: Ennes Publications, First Edition 1998.

# பின்னிணைப்பு 3

**மீராவின் கையெழுத்து முன்மாதிரி**

(மீராவின் கார்டுகளில் கடிதங்களில் சாய்வு எழுத்துக்களில் நிமிர்ந்திருக்கும் இலக்கிய அழகு. அவையும் நூலாக வெளிவர வேண்டும் — பாலா)



**AKARAM**

PRINTERS ● BOOK SELLERS ● PUBLISHERS
2, SIVANKOIL SOUTH STREET, SIVAGANGAI - 623 560

13/8/87





135,

மதுரை-625 019

**மீரா** (1938 - 2002) இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை உலகில் தமக்கெனத் தனியிடம் வகுத்துக் கொண்ட ஆற்றல்சால் ஆளுமையாளர் மீரா. 'மீரா கவிதைகள்' (மரபுக் கவிதை), 'மூன்றும் ஆறும்' (கவியரங்கக் கவிதை), 'கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்' (வசன கவிதை), 'ஊசிகள்' (அங்கதக் கவிதை), 'குக்கூ' (குறுங்கவிதை), 'வா இந்தப் பக்கம்' (கட்டுரை), 'மீரா கட்டுரைகள்' என்பன என்றென்றும் அவரது பெயர் சொல்லும் முத்திரை நூல்கள். கல்லூரிப் பேராசிரியர், முதல்வர், போராளி, இதழாசிரியர், கவிஞர், கட்டுரை ஆசிரியர், பதிப்பாளர், என்றாற் போல் பல்வேறு பரிமாணங்கள் படைத்தது மீராவின் ஆளுமை. 'மரபில் பூத்த புதுமலர்' என்றும், 'பாவேந்தர் பாரதிதாசனின் வாரிசு' என்றும் தமிழ் கூறும் நல்லுலகில் அடையாளம் காணப்பெற்றுள்ள மீராவின் பன்முகத் திறன்களையும் அறிமுகம் செய்யும் நோக்கில் எழுதப் பெற்றுள்ளது இந்நூல்.

**இரா.மோகன்** : மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற் புலத்தின் முன்னைத் தகைசால் பேராசிரியர்; கு.ப.ராஜகோபாலன் சிறுகதைகளை ஆராய்ந்து 1976-ஆம் ஆண்டில் முனைவர் பட்டம் பெற்றவர்; 'டாக்டர் மு.வ.வின் நாவல்கள்' என்னும் தம் முதல் நூலை 22 வயதில் எழுதியவர்; ஆய்வும் பதிப்பும் தொகுப்புமாக 112 நூல்களை வெளியிட்டிருப்பவர்; தமிழக அரசின் முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் விருது உள்ளிட்ட பல்வேறு விருதுகளும் பரிசுகளும் பெற்றவர்; நாடறிந்த பட்டிமன்ற நடுவர்; அமெரிக்கா, ஆஸ்திரேலியா, சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, ஷார்ஜா ஆகிய நாடுகளுக்குத் தேமதுரத் தமிழோசை பரப்புவதற்காகச் சென்று வந்தவர்; புதுதில்லி சாகித்திய அகாதெமியின் தமிழ்மொழி ஆலோசனைக் குழுவிலும் பொதுக்குழுவிலும் பத்து ஆண்டுகள் உறுப்பினராகப் பணியாற்றியவர்.



*Meera* (Tamil)
*Rs.50/-*


ISBN 812604463-4
9 788126 044634